# My My!
## My choice for the MAN

**Century's *Cosy-Cot* COTTON SHIRTING** with rich woollen feel






CENTURY for 100% cotton textiles

THE **CENTURY** SPG. & MFG. CO. LTD., BOMBAY 25 DD

For Fashion Fabrics choose *Century Shirtings!*

NPS-CM 15



# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி சித்திரை 25 — மே 7, 1972




| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

சந்தாத் தொகையை மணியார்டர் அல்லது சென்னையில் மாற்றக்கூடிய டிமாண்ட் டிராப்ட்மூலம் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

"கல்கி"யில் வெளி வாரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# உங்கள் அனல்உலை சுட்ட கற்கள் காலதாமதமாக இயங்கினால் ஒவ்வொரு கணமும் பணம் விரயமாகும்

இதைவிட அதிமோசம் இது எப்பொழுது இயங்கத் தொடங்குமோ என்று தெரிந்து கொள்ள முடியாதது.

ஆனால் இந்தப் பிரச்னை உங்களைத் தீண்டாது. நீங்கள் உங்கள் தேவைகளை ஒரிஸ்ஸா சிமெண்டிடம் ஒப்படைத்து விட்டால், இதில் காலதாமதம் கிடையாது; எங்களிடம் சால்ஜாப்புகள் இல்லை. உங்களுக்குக் குறிப்பிட்ட காலத்தில் உங்கள் அனல்உலை கற்கள் வந்தடையும்.

நாங்கள் நீண்டகால ஆர்டர்களையும் ஏற்றுக் கொள்கிறோம். நீங்கள் எங்கள் டால்மியா அனல்உலை சுட்ட கற்களை வாங்கினால் அதன் தரம் நிச்சயம் உயர்தரமாக இருக்கும்.



## ஒரிஸ்ஸா சிமெண்ட் லிமிடெட்

**தொழிலகம்: ராஜ்கங்க்பூர், ஜில்லா, சுந்தர்கர், ஒரிஸ்ஸா**
**தலைமை அகம்: 4, சிந்தியா ஹவுஸ் புதுதில்லி-1**

கல்கி

மலர் 31
இதழ் 41



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா

— பாரதியார்

# வறுமையை விரட்ட வழி என்ன?

ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்களும் அவரது கட்சிக்காரர்களும் ஓயாமல் ''வறுமை ஒழிக'' என்று முழக்கிக் கொண்டிருக்கிறார்கள். சுதந்திரம் வந்த பின் ஒரு வெள்ளி விழாக் காலமாகப் பதவி வகித்து வரும் அதே கட்சியினர் இப்போது இவ்விதம் முழக்குவதே அவர்களது கையாலாகாத்தனத்துக்கு நல்ல சான்றுப் பத்திரம். சுதந்திர பாரத சர்க்கார் வறுமை ஒழிப்பில் என்ன 'சாதித்திருக்கிறது' என்பதை உலகப் பெரும் பொருளாதார வல்லுநரான மக்நமாரா தரும் புள்ளி விவரத்திலிருந்து அறியலாம்: ''கடந்த பத்தாண்டு காலமாக இந்தியாவின் மொத்த உற்பத்தி பரவலாகப் பெருகி யிருக்கிறது. ஆனாலும் இன்று அங்குள்ள மக்களில் நாற்பது சதவிகிதத்தினர் — அதாவது இருபது கோடி மக்கள்—ஏழைமை மட்டத்துக்குக் கீழேயே இருக்கிறார்கள். போதிய சத்துணவு பெறக் கூட முடியாத நிலையில் இவர்கள் இருக்கிறார்கள். அத்தேசத்தில் பத்து சதவிகித மக்கள் — அதாவது ஐந்து கோடிப் பிரஜைகள் — இந்தப் பத்தாண்டு முன்னேற்றத்தில் எந்தப் பங்கையும் பெறவில்லை என்பது மட்டுமின்றி, முன்னிலும் ஏழைகளாகியிருக்கிறார்கள்.''

வறுமை ஒழிப்புக்காக நமது காருண்ய சோஷலிச சர்க்கார் முனைப்புடன் செய்கிற ஒரே காரியம், பணக்காரர்களின் முதுகை நெரிக்கும் விதத்தில் வரி விதிப்பதுதான். தேசத்தில் உள்ள 50 கோடி மக்களில் இருபதினாயிரத்தில் ஒருவர்தான் ரூ. 50,000க்கு மேல் வருஷ வருமானம் உள்ளவரென்று வருமான வரிப் புள்ளி விவரம் சொல்கிறது. இவர்களை முடக்கிப் போடுவதால் மற்ற கோடாநு கோடி பேரை வாழ்விக்க முடியும் என்று எண்ணுவதன் அறியாமையை என்னென்பது? கடும் வரி காரணமாக இவர்களது தொழிலூக்கத்தைக் குலைத்து, புது முதலீடுகள் தோன்றுவதைத் தடுத்திருப்பதால், வேலை இல்லாப் பிரச்னைதான் வளர்ந்திருக்கிறது; ஏழைகளே மேலும் அவதியுறுகிறார்கள். தற்போது ஓரளவு செழிப்பாக உள்ள தொழிலதிபர்களையும், விவசாயப் பண்ணைக்காரர்களையும் தரித்திரராக்குவதால் தேசத்தின் தரித்திரம் அதிகமாகத்தான் செய்யும்; வறுமை ஒழிப்புக்கு நேர் எதிர் விளைவே உண்டாகும்.

இப்போது செய்ய வேண்டுவதென்ன, செய்யக் கூடியதென்ன என்பதற்கு அறிஞர் ஸ்ரீ க. சந்தானம் அவர்கள் சில யோசனைகள் கூறுகிறார்:

முதலாவதாக, வயது வந்த அனைவரையும் ஏதேனும் ஒரு விதத்தில் உபயோகமான தொழிலில் அமர்த்த வேண்டும்.

இரண்டாவதாக, ஏற்கெனவே வேலையில் உள்ளவர்களைத் திறம்பட உழைக்கச் செய்து, உற்பத்தியைப் பெருக்க வேண்டும்.

மூன்றாவதாக, பணவீக்கமும் நாணய மதிப்பில் ஏற்றத் தாழ்வுகளும் ஏற்படாமலிருக்கும் பொருட்டு, எல்லாத் தொழிலுக்கும் ஊதியம் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

வயது வந்த எல்லோருக்கும் வேலை தர வேண்டும் என்பது முக்கியத்வம் வாய்ந்தது. இது சாத்தியமா என்று தோன்றலாம். அடிப்படையிலிருந்து பல அம்சங்களைச் செவ்வையாக்கினால் இது நிச்சயம் சாத்தியமே. ஒரு நாட்டில் வேலை செய்யக் கூடிய எல்லாருக்கும் வேலை வாய்ப்புத் தேடித் தருவது இயலாத காரியமல்ல. வேலை கிடைக்கவில்லை என்று எவரும் சொல்லாதிருப்பதுதான் ஒரு சுபிட்ச நாட்டுக்கு இலட்சணம். இதை அடைவதே நம் இலட்சியமாக வேண்டும். 'வெளியிலிருந்து வந்த அகதிகளில் பத்துப் பேரில் ஒன்பது பேருக்கே உணவு தருவோம், மற்ற ஒருவரைப் பட்டினி போடுவோம்' என்று கூறினால் அது பைத்தியக்காரத்தனம் என்று தயங்காமல் சொல்லுவோம். தாய்நாட்டிலேயே உள்ள கோடாநு கோடி இளைஞர்கள்

வேலை இன்றி வயிற்றுப்பாட்டுக்குத் தவிக்கும்போது அவர்களில் 50 சத விகிதத்தினருக்கு, அல்லது 60 சத விகிதத்தினருக்கு வழி செய்கிறோம் என்பதும் இதே போன்றதுதானே? இந்தப் பரந்த தேசத்தில் அத்தனை பேருக்கும் தொழில் செய்ய உரிமையும் வசதியும் உண்டு. தற்போது மாவட்டந்தோறும் ஆயிரம் பேருக்கு வேலை தருவதற்கு மத்திய சர்க்கார் உத்தேசித்திருக்கிறது. ராட்சத இயந்திரங்களை அத்தியாவசியத்துக்கே பயன்படுத்துவதென்றும், மனித சக்தியை அதிகமாகப் பிரயோஜனம் செய்து கொள்வதென்றும் மத்திய — மாநில சர்க்கார்கள் தீர்மானித்துக் கிராமந்தோறும் சாலை போடுவது, குடிநீர் வசதி செய்வது முதலிய நற்பணிகளில் முனைந்து ஈடுபட்டால் கோடானு கோடிப் பேருக்கு வேலை கிடைக்கும். முதலில் சம்பளம் சிறிது 'கட்டை'யாக இருந்தாலும் பரவாயில்லை. ஒன்றுமில்லாததற்கு இது வரவேற்கத் தக்கதேயன்றோ? கிராமப்புறங்களில் வயல்வேலை இல்லாத சமயங்களில்தான் வேலையின்மை தலைதூக்குகிறது. கிராமங்களில் பாதிப் பேருக்கு வருடத்தில் நூறு நாட்கள் வேலை தர வேண்டியிருக்கும். இதைப் பஞ்சாயத்துக்கள் மேற்சொன்ன அபிவிருத்தித் திட்டங்களில் ஈடுபடுவதன் மூலம் சமாளிக்க முடியும்.

கல்வி பெற்ற நகரவாசிகளுக்கு வருடம் முழுவதும் வேலை தந்தாக வேண்டும். இதற்குத் தொழிலபிவிருத்தி மிகவும் விரைவுபடுத்தப் பெற வேண்டியது அவசியம். சோஷலிஸமும், பெர்மிட் — லைசென்ஸ் முறையும் இத் திசையில் செய்துள்ள உற்பாதம் கொஞ்ச நஞ்சமல்ல. 'பணக்காரர்களைக் கொடுமை செய்வதல்ல சோஷலிஸம்; மக்களுக்கு நன்மை செய்வதுதான் சோஷலிஸம்' என்ற உணர்வும், பெர்மிட்—லைசென்ஸ் ஏக போக்கியத்தை விடுகிற நல்லறிவும் ஆட்சியினருக்கு ஏற்பட்டால், தொழில் துறையில் அற்புத வளர்ச்சி ஏற்படும். உற்பத்தி — வியாபார நிறுவனங்கள் தன்னம்பிக்கையுடன் வாழும்படி செய்தால், அவற்றில் கல்வி கற்ற நகர மக்களை ஒரு விகிதாசாரப்படி கணக்கிட்டு வேலைக்கு அமர்த்திக் கொள்ளுமாறு விதிக்கலாம். படித்துவிட்டு வேலையில்லாமலிருப்பவருக்குக் குறைந்த பட்சம் மாதம் 100 ரூபாயாவது சம்பளம் கிடைக்குமாறு தொழில், வியாபார நிறுவனங்களிலும், சர்க்கார் காரியாலயங்களிலும் பயிற்சிக் காலமென்று கருதி இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் அமர்த்துவதற்கு வழி காண வேண்டும். பள்ளிக்கூடங்களில் ஆசிரியர் எண்ணிக்கையை 25 சத விகிதம் உயர்த்தினால் எத்தனையோ விதங்களில் நெரிசல் குறையும்.

இதனைத்துக்கும் மூலாதாரம் நிதி. நாடு உள்ள நிலையில் இப்போது வேலையில் இருப்பவர்களுக்கு ஊதியத்தை உயர்த்திக் கொண்டே, புதிதாகவும் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவது இயலாத காரியம். நம் நாட்டின் மக்கள் மனிதாபிமானம் உள்ளவர்கள். தங்களுக்குச் சிறிது ஊதிய உயர்வு கிடைப்பதை விட, வருமானமே அற்ற சகோதரர்களுக்கு வேலை கிடைப்பதை அவர்கள் வரவேற்கவே செய்வர். எனவே வேலையின்மைப் பிரச்னை தீரும் வரையில் ஊதிய உயர்வுகளைக் கட்டுப்படுத்த முடியும். இதற்கு இசைவாக விலைவாசி உயர்வு ஏற்படாமல் விவேகமாகப் பொருளாதாரத்தை இயக்க வேண்டும். வேலையில் இருப்பவருக்கு ஊதிய உயர்வா, வயிற்றுப் பாட்டுக்குத் தவிப்போருக்கு வேலையா — என்பது அரசாங்கங்கள் மிகவும் கவனிக்க வேண்டிய அம்சம். உதாரணமாகத் தற்போது தமிழக அரசாங்கம் மூன்றாம் நிலை - நான்காம் நிலைச் சிப்பந்திகளுக்கு ரூ. 10 ஊதிய உயர்வு அளித்திருக்கிறது. இதனால் அரசாங்கத்துக்கு ஆறு கோடி ரூபாய் செலவேற்படுகிறது. இதைக் கொண்டு 50,000 இளைஞர்களை மாதச் சம்பளம் நூறு ரூபாய் தந்து உபயோகமான வேலையில் ஈடுபடுத்தியிருக்கலாமல்லவா? இதை விளக்கிக் கூறினால் ஏற்கனவே வேலையில் உள்ளவர்கள் ஒப்பாமல் போவார்களா?

வறுமை ஒழிய வேண்டும் என்றால், எல்லாருக்கும் வேலை வாய்ப்பை உண்டாக்கிச் சம்பளம் கொடுத்தால்தான் முடியும். இதற்குப் பெரிய புரட்சி எதுவும் தேவையில்லை. சர்க்கார் முரட்டுப் பிடிவாதத்தை விட்டுத் தன் கொள்கைகளை இளக்கிக் கொண்டாலே போதும். பிரஜைகளும் தங்களைப் பற்றி மட்டுமே எண்ணாமல், தங்கள் சகோதரர்களைப் பற்றி எண்ணி, அவர்களுக்காகச் சிறிது தியாகம் செய்ய வேண்டும். போக போக்கிய ஆடம்பர வாழ்வை இந்தியா நாடிப் போகாமல், 'எளிய வாழ்க்கை, சீரிய சிந்தனை' என்ற தொன்றுதொட்ட வழியில் சென்றால் நாட்டு மக்கள் அனைவரும் வேலை வாய்ப்புப் பெற்று, தங்கள் வறுமையைத் தீர்த்துக்கொண்டு, நாட்டையும் வளப்படுத்த முடியும் என்பது சர்வ நிச்சயம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஒரு சொத்து இன்றைய உரிமையாளரிடமிருந்து அவரது மக்களுக்குப் பாகப் பிரிவினை செய்யப்படுகையில் அது இயற்கையாகவே பல துண்டுகளாகிறது. இதைக் கவனியாமலே சொத்துக்களையெல்லாம் சர்க்கார் பறிமுதல் செய்கிற கொள்கையைத் தீவிரமாகப் பின்பற்றி வருகிறார்கள். அரசாங்கம் ஆர்ஜிதம் செய்கிற சொத்துக்கு அதன் மார்க்கெட் மதிப்புப்படி நஷ்டஈடு தரவேண்டிய இல்லை என்று சமீபத்தில் யூனியன் தொழில் மந்திரி மசோதாக் கொண்டு வந்திருக்கிறார். இது பெருத்த அநீதிக்கு வழி வகுக்கிற காரியம். மக்களின் அடிப்படை உரிமைகளை அடியோடு புறக்கணித்து இவ்விதம் செய்வது ஏன் என்று புரியவில்லை. இந்த நடவடிக்கைகள் சட்டத்தின் ஆட்சிக்கே ஊறு விளைவிப்பவை என்பதை எடுத்துக் காட்டுமளவுக்குப் பலம் பொருந்திய எதிர்க் கட்சிகள் இல்லாதது பரிதாபம்.

ஸுப்ரீம் கோர்ட்தான் சட்டத்தின் ஆட்சியை நிலைநிறுத்தத் தன்னால் முடிந்த நல்லதையும் செய்து வருகிறது. உதாரணமாகச் சமீபத்தில் கேரள நிலச் சீர்திருத்த மசோதாவில் பல பகுதிகள் அரசியல் சாஸனத்துக்கு முரணானவை என்று ஸுப்ரீம் கோர்ட் தீர்ப்புக் கூறியிருக்கிறது.

★

தனியாருக்குச் சொந்தமான காடுகளை (ஜன்மி நிலங்களை) தமிழக சர்க்கார் ஆர்ஜிதம் செய்வது செல்லாது என்று ஸுப்ரீம் கோர்ட் கூறியுள்ள தீர்ப்பு முக்கியத்துவம் வாய்ந்ததாகும். சென்னை ஹைகோர்ட்டின் தீர்ப்பை மாற்றி ஸுப்ரீம் கோர்ட் இவ்விதம் முடிவு செய்திருக்கிறது. சாஸனத்தின் 31-ஏ பிரிவு கூறுவது போன்ற 'விவசாயச் சீர்திருத்தம்' எதுவும் மேற்படி நில ஆர்ஜிதத்தால் செய்யப்படவில்லை என்பதால் இதனை அங்கீகரிப்பதற்கில்லை என்பது தீர்ப்பு. விவசாயச் சீர்திருத்தம் இன்றி அரசாங்க வருமானத்தை உயர்த்திக் கொள்வதற்காகவே ஆர்ஜிதம் செய்வது சட்டப்படி செல்லாது.

★

சாஸனத்தின் 31-ஏ பிரிவு, 'நிலச் சீர்திருத்த'த்தை முன்னிட்டுச் சர்க்கார் ஆர்ஜிதம் செய்வதைத்தான் இலட்சியமாகக் கொண்டது. தனி நபர்களின் ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதற்காக அரசாங்கம் ஆர்ஜிதம் செய்யலாமென இப் பிரிவில் விதிக்கப்படவில்லை; சர்க்கார், ஒருவரின் உடைமையை எடுத்து இன்னொருவருக்குத் தருவதற்கு வசதி செய்வதும் சாஸன நோக்கமல்ல. ஏகாதிபத்தியத்துக்கு ஊன்றுகோல் தருவதல்ல சாஸனத்தின் உத்தேசம். 'உச்ச வரம்புச் சட்டங்கள்' என்று சொல்லப்படும் சட்டங்களைப் போட்டு, அவை நிர்ணயிக்கிற அளவுக்கு அதிகமாக இருப்பதை அரசாங்கம் பறிமுதல் செய்வது நிச்சயமாகச் சாஸனத்தின் நோக்கமல்ல.

★

(சொத்துரிமையைப் பறிக்கும்) 24-வது சாஸனத் திருத்தமும் அதைத் தொடர்ந்து வந்த திருத்தங்களும் செல்லுமா என்று ஸுப்ரீம் கோர்ட்டில் பரிசீலனைக்கு விடுவதற்குத் தருணம் முற்றிவிட்டது. ஏதேச்சாதிகாரம் வெகு வேகமாக முன்னேறி வருகிறது. இன்னமும் ஸுப்ரீம் கோர்ட் பரிசீலனையைத் தள்ளிப் போடுவது ஆபத்து விளைவிக்கும்.

★

மதுவிலக்கை அரசாங்கம் ஆதரிக்க வேண்டும் என்று அரசியல் சாஸனத்தின் நான்காம் பகுதியில் ஆட்சிமுறைக்கான வழிமுறைகளில் கூறப்பட்டுள்ளது. மத்திய சர்க்காரானது இதன்படியே நடக்கப் போகிறது என்றும், மதுவிலக்கை ரத்து செய்வதாக இல்லை என்றும் மத்திய சமூக நல உதவி மந்திரி மக்கட் சபையில் கூறினார். மதுவிலக்குக்கு ஆதரவு தர வேண்டும் என்கிற சாஸன ஆணை மத்திய சர்க்காரை மட்டுமின்றி, ராஜ்ய சர்க்கார்களையும் கட்டுப்படுத்துவதாகும். மத்திய சர்க்கார் இதை மதித்தே நடக்கப் போகிறதென்னும்போது, ராஜ்ய அரசாங்கமும் அவ்விதமேதான் செய்ய வேண்டும். சாஸனத்தின் கட்டுப்பாட்டுக்குத் தில்லி சர்க்கார் மட்டுமே அடங்க வேண்டும் என்றும், ராஜ்ய சர்க்கார் அடங்க வேண்டியதில்லை என்றும் கிடையாது. மதுவிலக்கு நிர்வாகத்தில் ராஜ்ய சர்க்காருக்கு சாஸனம் பொறுப்புகள் தந்திருப்பதால், ஆதாரக் கொள்கைக்கே முரணாக அது நடக்கலாம் என்று குயுக்தி செய்வதற்கில்லை.

★

ஏறக்குறைய அறுபது வயதில் பல பெரிய மனிதர்கள் மரணம் அடைவதற்குக் காரணம் மதுவும் புகையிலையுமே என்பது என் கருத்து. இவர்களுக்கு இந்தப் பழக்கங்கள் இல்லாவிடில், இன்றுள்ள நல்ல சௌகரியங்களையும் மருத்துவ வசதிகளையும் கொண்டு அவர்கள் எண்பது வயதுக்கும் மேல் வாழ முடியும். மது பானத்தாலும் புகை பிடிப்பதாலும் இதயமும் ஈரலும் மிகவும் பாதிக்கப்படுகின்றன. இதுவே மரணத்துக்கு இட்டுச் செல்கிறது.

## அகமதாபாத்தில் ஸ்ரீ பாலமுருகன்

தமிழர் இருக்கும் இடமெல்லாம் தமிழ்க் கடவுள் முருகனுக்கு ஓர் ஆலயம் இருக்க வேண்டாமா? அகமதாபாத்தில், சூரியநகர் (கோக்ரா) ஸ்ரீ பாலமுருகனுக்குச் சிறு கோவில் கட்டி, சென்ற ஆறு ஆண்டுகளாக பங்குனி உத்திரம் விழா சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள். இப்பொழுது அந்தப் பாலமுருகனுக்குத் தமிழ்நாட்டுப் பாணி கோபுரத்துடன் கூடிய ஒரு பெரிய ஆலயம் எழுப்ப முயற்சி எடுத்துக் கொண்டுள்ளார்கள். அதற்கும் பெருவாரியான நிதி தேவைப் படும் என்பதைச் சொல்லத் தேவையில்லை. இந்த ஆலயத் திருப்பணியில் பங்கு பற்றி ஸ்ரீ பால முருகனின் அருள் பெற விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்துக்குப் பொருளுதவி செய்யலாம்:
Secretary, Sri Bala Murugan Devasthanam, Suryanagar, (Khokhra) Ahmedabad-8

# என்ன சேதி?

## சங்கரா குருகுலம் பொலியட்டும்!

கடந்த ஒரு நூற்றாண்டில் திகழ்ந்துள்ள பண்டிதோத்தமர்களிடையில் ஒரு கடர்த்தாரகையாக நிற்பது காலஞ்சென்ற தேதியூர் பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளின் திருப் பெயர். வித்யாஸிம்மமான ஹரிஹர சாஸ்திரிகளிடம் நீண்டகாலம் குருகுலவாசம் செய்து, சாஸ்திரங்களைக் கரைத்துக் குடித்தவர் ஸ்ரீ தேதியூர் சாஸ்திரிகள். இயல்பாகவே மிகவும் கூர்த்த அறிவு பெற்றவராதலால், சாஸ்திரங்களின் கருத்துக்களை அநாயாசமாக விளங்கிக் கொண்டார்; மற்றவருக்கும் அற்புதமாக விளக்கி வைத்தார். வேத நிதியாக, சாஸ்திரப் பொக்கிஷமாக,



அபிராமபுரத்தில் ஆதிசங்கரர்

உபந்நியசித்து அறிவுச் செல்வத்தை வழங்கி வந்தார். அறிவுச் செல்வத்தை மட்டுமின்றி, பொருட் செல்வத்தையும் வறிய பண்டிதர்களுக்கு உதார குணத்துடன் அள்ளித் தந்தவர் ஸ்ரீ சாஸ்திரிகள். அவரது பேச்சிலே கண்டிப்பு இருந்தது. சநாதன தர்மத்துக்கு விரோதமான போக்குகளைக் கண்டு பொங்குவார். சித்தம் முற்றிலும் மதுரமாகவே இருந்தது. இதயம், அறிவு இரண்டிலும் சிறப்புக் கொண்ட சாஸ்திரிகளுக்கு ஒரு ஞாபகார்த்தமாக நிற்பது அபிராமபுரத்திலுள்ள குருகுலம். சாஸ்திரிகள் சக்திக்கு மீறிச் செலவிட்டுப் பேணிய குருகுலத்தில், அவர்

அநுஷ்டான சீலராக விளங்கினர். ஸ்ரீ சிருங்ககிரி ஜகத்குரு சந்திரசேகர பாரதி ஸ்வாமிகள் இவருக்கு 'வேதமூர்த்தி' என்று விருது சூட்டினர்கள். ஸ்ரீ காமகோடிப் பெரியவர்கள் 'சாஸ்திர ரத்னாகரம்' என்ற பட்டத்தை அருளினார்கள். சநாதன தர்மத்தைச் சக்தி வாய்ந்த எழுத்தாலும் பேச்சாலும் பரப்பிய தேதியூர் சாஸ்திரிகள், குறிப்பாக ஆதிசங்கர பகவத் பாதர்களின் சித்தாந்தத்தையும், அவரது நூல்களையும் பரப்புவதில் விசேஷ ஈடுபாடுகொண்டிருந்தார். 1947ம் ஆண்டு மயிலை அபிராமபுரத்தில் தமது மனையில் ஸ்ரீ சங்கர குருகுலத்தை ஸ்தாபித்து, ஆதிசங்கரரின் மூர்த்தியை அதில் பிரதிஷ்டை செய்தார். அங்கு சங்கரரது நூல்களை விரிவாக



ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள்

புகழுடம்பு கொண்டபின்பும், சங்கர ஜயந்தி உத்ஸவம் ஆண்டுதோறும் விமரிசையாக நடந்துவருகிறது. இவ்வாண்டு சங்கர ஜயந்தியின்போது குருகுலத்தின் வெள்ளிவிழா நடைபெறுகிறது.

இவ்விழாவைச் சிறப்பாகக் கொண்டாடவும், வித்வத் சதஸ் நடத்தவும், சிறப்பு மலர் வெளியிடவும் உத்தேசிக்கப்பட்டுள்ளது. ஆதி பகவத்பாதர்களுக்கும், அவர்களுக்கு அடிமை பூண்ட அறிவுச் செல்வரான சாஸ்திரிகளுக்கும் ஒரே சமயத்தில் கைங்கரியம் செய்வது பாக்கியம். இக்கைங்கரியத்தில் பங்கு பற்ற விரும்பும் அன்பர்கள் பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீ சங்கர குருகுலம் வெள்ளிவிழாக் குழு, ஸ்ரீ சங்கர குருகுலம், அபிராமபுரம், சென்னை—18

## தொழிலதிபர் சம்மேளனத்துக்குப் புதிய தலைவர்

தென்னிந்தியத் தொழிலதிபர்கள் சம்மேளனத்தின் 1972—73வது நடப்பு ஆண்டுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார், திரு எம். எம். முத்தையா. இவர் கார்பரண்டம் யூனிவர்சல் லிமிடெட் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர். காலஞ்சென்ற தொழிலதிபர் ஏ. எம். எம். முருகப்பச் செட்டியாரின் புதல்வர். முருகப்பா அண்டு சன்ஸ் நிறுவனங்களில் பங்கு கொண்டவர். வயதில் சிறியவரானாலும் தொழில் அறிவிலும் நிர்வாக அநுபவத்திலும் முதிர்ந்தவர். அவருடைய தலைமையில் இந்தச் சம்மேளனம் தொழில் அமைதியை நிலைநாட்டுவதற்குப் பயனுள்ள பணியாற்றட்டும். திரு முத்தையாவை வாழ்த்துகிறோம்.



# மந்திரங்களின் மகிமை

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்



எத்தனையோ கிரமத்துடன் இயங்கி வரும் இந்தப் பிரபஞ்சத்தைப் பார்க்கும்போது இதையெல்லாம் செய்கிற பேரறிவு ஒன்று இருக்க வேண்டும் என்று தெரிகிறது. அந்தப் பரமாத்மாவிடமிருந்துதான் நாம் பார்க்கிற சகல வஸ்துக்களும், நாம் செய்கிற இத்தனை சப்தங்களும் உண்டாகியிருக்கின்றன. முதலில் சப்தப் பிரபஞ்சம் ஆகாயத்தில் உண்டான பின்தான் நாம் கண்ணால் பார்க்கிற பிரபஞ்சம் உண்டாயிற்று. ஆகாயத்தில் இந்த சப்தங்கள் அனைத்தும் இருக்கின்றன. வெளிப் பிரபஞ்சத்திலிருப்பதெல்லாம் மனிதனின் உடலில் இருக்கின்றன. வெளியிலிருக்கிற ஆகாசம் ஜீவனின் இருதயத்திலும் இருக்கிறது. யோகிகள் சமாதி நிலையில் இந்த ஹிருதயாகாசத்தை அனுபவிக்கிறார்கள். அப்போது உள், வெளி என்ற பேதம் நீங்கி, சகலமும் ஒன்றாகி விடுகின்றன. இதய ஆகாசமும் வெளி ஆகாசமும் ஒன்றாகி விடுகின்றன. இந்த நிலையில் யோகிகளுக்கு ஆகாசத்திலுள்ள சப்தங்களைக் கிரகிக்க முடிகிறது. அவற்றால் லோக க்ஷேமார்த்தமான சப்தக் கோவைகளே வேத மந்திரங்களாகும்.

இவற்றை யாரும் உண்டாக்கவில்லை. ஒவ்வொரு மந்திரமும் ஒரு ரிஷியின் பேரில் இருந்தாலும், உண்மையில் அந்த ரிஷி அந்த மந்திரத்தை இயற்றவில்லை. ஆகாசத்தில் அநாதியாக உள்ள மந்திரத்தை அந்த ரிஷியே முதலில் கண்டுகொண்டு, உலகுக்கு வெளியிட்டார் என்று அர்த்தம். 'ரிஷி' என்றால் 'மந்த்ர த்ரஷ்டா' (மந்திரத்தைக் கண்டு பிடித்தவர்) என்றுதான் அர்த்தம் சொல்லியிருக்கிறது. 'மந்த்ர கர்த்தா' (மந்திரத்தைச் செய்தவர்) என்றல்ல. பரமாத்மாவின் மூச்சே வேத மந்திரங்கள். எனவே இவையின்றி பரமாத்மா இல்லை. அதாவது பரமாத்மாவைப் போலவே இவையும் அநாதியானவை.

மந்திரங்களின் அர்த்தத்தை விட சப்தத்துக்குத்தான் முக்கியத்வம். அவற்றின் அக்ஷரத்துக்கும் அவற்றைச் சொல்ல வேண்டிய ஸ்வரத்துக்குமே சக்தி உண்டு. அர்த்தத்துக்கு அந்த அளவு விசேஷமில்லை. உதாரணமாக, தேள் கொட்டு மந்திரத்தை எடுத்துக்கொண்டால், அதற்கு அர்த்தம் என்று ஒன்றும் விசேஷமாக இராது. அர்த்தத்தைச் சொல்லக் கூடாது என்றும் சொல்வார்கள். ஆனாலும் அந்த சப்தக் கோவையை ஜபித்தால் அக்ஷரங்களின் சக்தியிலேயே விஷம் இறங்கி விடுகிறது. ஒவ்வொரு விதமான சப்தத்துக்கு ஒவ்வொரு விதமான சக்தி உண்டு. ஆபிசாரம் என்று பிறருக்குக் கெடுதல் செய்யக் கூட மந்திரம் இருக்கிறது. அந்த சப்தங்களுக்குக் கெடுதல் செய்யும் சக்தி இருக்கிறது. இவற்றில் எல்லாமே சப்தத்தைச் சுத்தமாகச் சொல்வதில்தான் சக்தி. பில்லி சூனியம் வைக்கிறவர்களின் பல்லைத் தட்டி விடுவதுண்டு. ஏனென்றால் பல் போனால் சொல்லும் மாறுபடும் — அவர்கள் ஜபிக்கிற மந்திரங்களில் சப்த தோஷம் உண்டாகும். அதனால் அவை பலன் தராமல் போகும். உச்சாரணம் சுத்தமாக இருந்தால் அக்ஷரங்கள் பலன் தரும். சப்தங்களுக்கே இப்படிச் சக்தி இருப்பதைப் புரிந்து கொண்டோமானால் அப்புறம் எந்த மந்திரம் எந்த பாஷையில் இருக்கிறது, பாஷையை மாற்றலாமா என்ற யோசனைகள் எழும்பாது. இவை மந்திரத்தை இங்கிலீஷில் மொழிபெயர்க்கலாமா, தமிழில் சொன்னால் தானே நம் அப்பாவுக்குப் புரியும் என்றெல்லாம் கேட்காமலிருப்போம்.

எந்த சப்தங்கள் சகல பிராணிகளுக்கும் இகபர நலன்களைத் தருமோ, அவையே வேதங்களில் உள்ள மந்திரங்கள். நம் காதுக்குக் கேட்காதது ரிஷிகளுக்குக் கேட்குமா என்று கேட்கலாகாது. நமக்குத் தெரியாததைக் காண்கிற திவ்விய திருஷ்டி, நமக்குக் கேளாததைக் கேட்கும் திவ்விய சுரோத்திரம் எல்லாமே உண்டு. இப்போது நம் பார்வை நம் கண்ணிலுள்ள லென்ஸைக் கொண்டு நடைபெறுகிறது. இந்த லென்ஸ் வேறு விதமாக இருந்தால் நாம் பார்ப்பதெல்லாம் வேறு விதமாகத் தெரியும். யோக சாதனையால் இந்த திவ்விய சக்திகளைப் பெற முடியும்.

வேதத்தில் இருப்பவற்றை நம் கண்ணாலும் காதாலும் பரீட்சிப்பது சரியல்ல. வாஸ்தவத்தில் நம் கண்ணுக்கும் காதுக்கும் எட்டாததைச் சொல்லவே வேதம் இருக்கிறது. நமக்கு நேரில் தெரிவதை நாம் தெரிந்து கொள்கிறோம். அதற்கு வேதம் என்று ஒன்று வேண்டியதே இல்லை.

'வேதத்தை எப்படி நம்புவது? அதற்கு ஒரு யுக்தி சொல்லுங்கள்' என்று கேட்பதே பொருத்தமில்லை. யுக்திக்கு எட்டாததைச் சொல்லவே வேதம் இருக்கிறது. எதை ருசுவினால் நிரூபிக்க முடியாதோ, எங்கே புத்தி எட்டாதோ, அப்படிப்பட்ட பரம சத்தியங்களைத் திவ்விய திருஷ்டி உள்ள முனிவர்கள் அறிந்து வேதமாகத் தந்திருக்கிறார்கள். அந்நிய தேச விவகாரங்கள் நம் கண்ணுக்குத் தெரிவதில்லை. அங்கிருந்து வருகிற பத்திரிகைகளிலிருந்து தெரிந்து கொள்கிறோம். லோகத்திலுள்ள கருவி எதனாலுமே தெரிந்து கொள்ள முடியாத விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்காக வேத மந்திரங்கள் என்ற பத்திரிகையை ரிஷிகள் தந்திருக்கிறார்கள்.




## 32. காதலர் உலகம்

சீதாவும் லலிதாவும் கல்யாணம் நிச்சயமான நாளிலிருந்து ஆனந்தமயமான கனவு லோகத்தில் சொர்க்க சுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். பசும் புல் தரையில் அழகிய பட்டுப் பூச்சிகள் வர்ணச் சிறகுகளை அடித்துக் கொண்டு அங்குமிங்கும் சஞ்சரிப்பதைப் போல் அவர்கள் இந்திரபுரியின் நந்தவனத்தில் யதேச்சையாக அலைந்து திரிந்தார்கள். தேவலோகத்து பாரிஜாத மரங்களிடையே அவர்கள் தேன் வண்டுகளாக உலாவித் திரிந்து பாரிஜாத புஷ்பங்களில் கசிந்த இனிய தேனைத் தேவாமிருதத்தோடு பருகி மகிழ்ந்தார்கள்.

மாயா லோகம் போன்ற மேக மண்டலங்களுக்கு மேலே நின்று அவர்கள் ஆடிக் களித்தார்கள். நட்சத்திரங்களிடையே வட்டமிட்டு ஒருவரை ஒருவர் ஓடிப் பிடித்தார்கள். ஆகாச கங்கையைக் கையினால் அள்ளி ஒருவர் மேல் ஒருவர் தெளித்து மகிழ்ந்தார்கள். வெள்ளைப் புறாக்களாகி மந்தமாருதத்தில் மிதந்தார்கள். பசு மரக் கிளைகளில் இரு கிள்ளைகளாகி உட்கார்ந்து யாழிசை போன்ற மழலை மொழியில் பேசிக் கொஞ்சினார்கள்.

கல்யாணம் நிச்சயமான நாளிலிருந்து இருவருடைய உள்ளங்களும் உடல்களும் அதிசயமான வளர்ச்சி பெற்றிருந்தன. முகங்கள் புதிய காந்தி பெற்று விளங்கின. மேனியில் புதிய மெருகு தோன்றித் திகழ்ந்தது. தினம் தினம் பொழுது புலரும்போது அவர்களுக்கு மட்டும் ஒரு புதுமையான சௌந்தரியத்துடன் புலர்ந்தது. சூரியன் என்றுமில்லாத ஜோதியுடன் உதயமானான்: அந்தி மயங்கி நிழல் படர்ந்து வரும் மாலை நேரத்தின் மோகத்தையோ வர்ணிக்க முடியாது.

ஆகா! இரவின் இன்பத்தைத்தான் என்னவென்று சொல்வது? வானத்தில் பிறைச் சந்திரன் பிரகாசித்தால் அதன் அழகைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். முழுமதியாக இருந்தாலோ உள்ளம் கடலைப்போல் பொங்கத் தொடங்கி விடும். சந்திரனே இல்லாத இரவு மட்டும் அழகில் குறைந்ததா, என்ன? அடடா! கோடானு கோடி வைரங்களை வாரி இறைத்ததுபோல் சுடர்விடும் நட்சத்திரங்களோடு வானம் விளங்கும் காட்சிக்கு இணை வேறு உண்டோ?

விழித்திருக்கும் வரையில் மூச்சு விடாமல் அவர்கள் பேசிக் கொண்டிருப்பார்கள். தூங்கினாலோ எத்தனை இன்பமயமான கனவுகள்?

சீதாவின் அன்னை அகண்ட காவேரியில் வேனிற் காலத்தில் ஓடும் பளிங்கு போல் தெளிந்த ஊற்று நீரில் குளிக்கும் ஆனந்தத்தைப் பற்றி ஒரு நாள் சொன்னாள். தன்னுடைய இளம் பிராயத்தில்

அவ்விதம் அடிக்கடி சென்று குளிப்பதுண்டு என்று கூறினாள். மாமா விட்டாலய்யரை மிகவும் நச்சுப்படுத்திச் சீதா காவேரியில் போய்க் குளித்து வர அனுமதி பெற்றாள். தோழிகள் இருவரும் ராஜம்மாளும் வண்டி கட்டிக் கொண்டு காவேரியில் குளிக்கச் சென்றார்கள். பிருந்தாவனத்தில் கண்ணன் வாழ்ந்திருந்த காலத்தில் கோபாலரும் கோபியரும் யமுனையில் இறங்கிக் கண்ணனோடு நீர் விளையாடியபோது அடைந்த ஆனந்தத்துக்கு இணையான ஆனந்தத்தைச் சீதாவும் லலிதாவும் அன்று அடைந்தார்கள். அவ்விதம் அகண்ட காவேரியில் குளித்து விட்டுத் திரும்பி வரும்போதுதான் சூரியாவும் பாலகிருஷ்ணனும் குஸ்திச் சண்டை போடும் காட்சியைக் கண்டார்கள். சீதாவுக்கும் லலிதாவுக்கும் சற்று நேரத்துக்கெல்லாம் அது மறந்து போய்விட்டது. மத்தியானம் சாப்பாடு முடிந்ததும் அந்தரங்கம் பேசுவதற்குத் தனி இடத்தை நாடி அவர்கள் குளத்தங்கரை பங்களாவுக்குச் சென்றார்கள். அந்த வருஷம் கார்த்திகை மாதத்தில் நல்ல மழை பெய்திருந்தபடியால் பங்குனி மாதக் கடைசியானாலும் குளத்தில் தண்ணீர் நிறைய இருந்தது. குளத்தில் தவழ்ந்து வந்த குளிர்ந்த தென்றல் சீதாவையும் லலிதாவையும் பட்டப் பகலிலேயே காதலரின் கனவு லோகத்துக்குக் கொண்டு போயிற்று.

அவர்களுடைய சம்பாஷணை அன்று பரிகாசத்தில் ஆரம்பமாயிற்று.

''லலிதா! நலங்கின்போது உன்னைப் பாடச் சொல்வார்கள். 'மாமவ பட்டாபி ராமா' கிருதியை நீ கட்டாயம் பாட வேண்டும். இல்லாவிட்டால் நான் உன்னோடு 'டூ' போட்டுவிடுவேன். அப்புறம் பேசவே மாட்டேன்!'' என்றாள் சீதா.

''முதலில் நீ 'மருகேலரா, ஓ ராகவா' கீர்த்தனத்தைப் பாடு! அதைக் கேட்டுத் தைரியப்படுத்திக் கொண்டு நானும் பாடுகிறேன். நீ தைரியசாலி, சீதா! எனக்கு அவ்வளவு தைரியம் இல்லையே! என்ன செய்வது?'' என்றாள் லலிதா.

''அடி திருடி! உனக்கா தைரியமில்லை என்கிறாய்? ஒரு வருஷத்துக்கு முன்னால் ஒருவருக்கும் தெரியாமல் அல்லவா நீயும் மிஸ்டர் பட்டாபிராமனும் கல்யாணம் நிச்சயம் செய்து கொண்டு விட்டீர்கள்? தைரியம் இல்லாமலா அப்படிச் செய்தாய்?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை, சீதா! நாங்கள் ஒருவருக்கொருவர் ஒரு வார்த்தை பேசிக் கொண்டதுகூட இல்லையே?''

''பேசிக் கொள்ளவில்லையா? அது எப்படி லலிதா? பொய் சொல்லாதே! வாயினால் நீ பேசினால்தான் பேச்சா? கண்களினால் பேசினால் பேச்சு இல்லையா! போன வருஷம் நீ தேவபட்டணத்துக்



குப் போயிருந்ததை யெல்லாந்தான் சொன்னாயே? அதைவிட வாய்ப் பேச்சு என்னத்துக்கு, லலிதா? சீதையும் ராமரும் என்ன செய்தார்கள்? கல்யாணத்துக்கு முன்னால் அவர்கள் வாயினாலா பேசிக் கொண்டார்கள்? மிதிலாபுரியில்

இராமர் வீதியோடு போய்க் கொண்டிருந்தார். சீதை கன்னி மாடத்தில் உப்பரிகையில் நின்றுகொண்டிருந்தாள். ஒருவரையொருவர் கண்ணாலே மட்டுந்தான் பார்த்துக் கொண்டார்கள். அவர்களுக்குள் அழியாக் காதல் ஏற்படுவதற்கு அது போதவில்லையா?''

''போதாது என்று நான் சொல்லவில்லை. ஆனால் பேசுவதற்குத் தைரியம் இருந்தால் பேசக் கூடாது என்பது இல்லையே? உன் கல்யாணம் நிச்சயமான பிறகு, உன்னை அவர் அழைத்துக் கேட்டதற்குப் பதில் சொன்னாயே? அதை நினைக்க நினைக்க ஆச்சரியமாயிருக்கிறது, சீதா! அதை இன்னொரு தடவை சொல்லேன். எனக்கு மறுபடியும் அதைக் கேட்க வேண்டும்போல் இருக்கிறது!''

''அதற்கென்ன பேஷாகச் சொல்கிறேன். இன்னும் பத்துத் தடவை நீ கேட்டாலும் சொல்கிறேன். நிச்சயதார்த்தம் ஆனபிறகு அவர்கள்—எனக்கு மாமனாராகவும் மாமியாராகவும் வரப் போகிறவர்கள் என்னைக் கூப்பிடுவதாக அழைத்துச் சென்றார்கள். ஒரு பக்கத்தில் எனக்குச் சந்தோஷமாயிருந்தது. மற்றொரு பக்கத்தில் என்ன கேட்பார்களோ என்னமோ என்று பயமாகவும் இருந்தது. ஆனாலும் அவர்கள் பேச்சைத் தட்ட முடியாமல் போனேன். அந்த மாமி என்னைக் கட்டிக் கொண்டு உச்சி முகந்து ஆசீர்வதித்தாள். 'நீ தான் எங்கள் வீட்டுக்கு லக்ஷ்மி, சரஸ்வதி எல்லாம். உன்னால் தான் எங்கள் குலம் விளங்கப் போகிறது' என்று ஏதேதோ சொன்னாள். மாமனாரோ நீளமாக ஏதோ பேசிக் கொண்டேயிருந்தார். என்னுடைய அழகுக்காகவும் சமர்த்துக்காகவுந்தான் வரதட்சிணையில்லாமலும், சீர் இல்லாமலும் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து கொள்வதாக அவர் சொன்னது மட்டும் எனக்குப் புரிந்தது. அதே சமயத்தில் என்னுடைய கவனம் எல்லாம் மாப்பிள்ளையிடம் சென்றிருந்தது. பிறகு மாமனாரும் மாமியாரும் சற்றுத் தூரமாகப் போனார்கள். நானும் போவதற்கு ஆயத்தமானேன். உடனே மாப்பிள்ளை என்னைப் பார்த்து, 'சீதா! போவதற்கு அவசரப்படாதே! சற்றுப் பொறு. உன்னை நான் ஒரு கேள்வி கேட்கப் போகிறேன். பதில் சொல்லுவாயல்லவா!' என்றார்.

நான் தலை குனிந்து மௌனமாயிருந்தேன். அவர் மறுபடியும், 'நேற்றைக்கெல்லாம் கலகலவென்று பேசிக் கொண்டிருந்துவிட்டு இன்றைக்குத் திடீரென்று பேசாமடந்தை



யானல் நான் விடமாட்டேன். என்னுடைய கேள்விக்குப் பதில் சொல்லியே தீர வேண்டும். நீ என்னைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டப்பட்டது எதற்காக?' என்று கேட்டார். அப்போது அவரை நிமிர்ந்து பார்த்தேன். நான் சொல்லப் போகும் பதிலை நினைத்து எனக்கே சிரிப்பு வந்தது. 'அந்தக் கேள்வியை நான் அல்லவா கேட்க வேண்டும்? நீங்கள்தானே என் சிநேகிதியைப் பார்ப்பதற்காக வந்துவிட்டு என்னைக் கல்யாணம் செய்து கொள்ள இஷ்டப்படுவதாகச் சொன்னீர்கள்!' என்றேன். இதைக் கேட்டதும் அவர் சிரித்துவிட்டார். ஆனால் உடனே முகத்தைக் கடுமையாக்கிக் கொண்டு, 'அப்படியானல் உனக்கு இந்தக் கல்யாணத்தில் இஷ்டமில்லை என்கிறயா? இப்போது ஒன்றும் முழுகிவிடவில்லை. கல்யாணத்தை நிறுத்திவிடலாம். உனக்கு மனசில்லையென்றல் சொல்லிவிடு!' என்ருர். 'ஆமாம், எனக்கு மனசில்லைதான், என் மனம் என்னிடத்தில் இல்லை. நேற்று சாயங்காலம் மோட்டாரிலிருந்து இறங்கிய போதே தாங்கள் என் மனத்தைக் கவர்ந்துகொண்டு விட்டீர்களே? இப்போது எப்படி எனக்கு மனசு இருக்கும்?' என்றேன். அப்போது அவருடைய முகத்தைப் பார்க்க வேண்டுமே லலிதா; அதில் குதூகலம் ததும்பியது. 'நான் எத்தனையோ பி.ஏ., எம்.ஏ., படித்த பெண்களையெல்லாம் பார்த்திருக்கிறேன்; பழகியிருக்கிறேன். உன்னைப் போல் சமர்த்தான பெண்ணைப் பார்த்ததேயில்லை. உன்னை இப்போது பிரிந்து போக வேண்டுமே என்றிருக்கிறது!' என்று அவர் சொன்ஞர். என் வாய்க் கொழுப்பு நான் சும்மா இருக்கக் கூடாதா? 'இப்போது இப்படிச் சொல்கிறீர்கள். நாளைக்கு ஊருக்குப் போனதும் மறந்து விடுகிறீர்களோ, என்னமோ? பி. ஏ., எம். ஏ., படித்த பெண்கள் அங்கே எத்தனையோ பேர்கள் இருப்பார்கள்!' என்று சொன்னேன். 'அதற்குள்ளே புகார் சொல்ல ஆரம்பித்துவிட்டாயா? பி. ஏ.யும் ஆச்சு; எம். ஏ.யும் ஆச்சு! அவர்கள் எல்லாம் உன் கால் தூசு பெறமாட்டார்கள். உன்னைத் தவிர எனக்கு வேறு ஞாபகமே இராது!' என்று அவர் கூறியபோது என் மனம் குளிர்ந்தது. இருந்தாலும் கிறுக்காக, 'துஷ்யந்த மகாராஜா சகுந்தலையிடம் இப்படித்தான் சொன்ஞர். ஊருக்குப் போனதும் மறந்துவிட்டார்' என்றேன். 'சீதா!' என்று அவர் அன்பு கனிய என்னை அழைத்து, 'துஷ்யந்தன் ராஜா; அதனுல் அவன் எது வேணுமானுலும் செய்வான். நான் சாதாரண மனிதன்தானே!' என்ருர். 'நீங்கள்தான் எனக்கு ராஜா!' என்று நான் சொன்னேன். 'துஷ்யந்தன் தேசத்துக்கு ராஜா; நான் உனக்கு மட்டுந்தான் ராஜா. ஆகையால் உன்னை என்னுல் மறக்க முடியாது. அடையாளம் தருகிறேன். அருகில் வா!' என்ருர். ஏதோ மோதிரம் அல்லது பவுண்டன் பேஞ இப்படி ஏதாவது தரப் போகிருர் என்று நினைத்துக் கொண்டு அவர் அருகில் போனேன். அவர் எனது வலது கையைத் தமது இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு கையில் முத்தம் கொடுத்தார். லலிதா! லலிதா! அதை நினைத்தால் இப்போது கூட என் உடம்பெல்லாம் புல்லரிக்கிறதடி!''

இவ்விதம் சீதா சொல்லிவிட்டுப் பின்வருமாறு பாடினுள் :

**'' எண்ணும் பொழுதிலெல்லாம் – அவன் கை**
**இட்ட இடந்தனிலே**
**தண்ணென் றிருந்ததடி – புதிதோர்**
**சாந்தி பிறந்ததடி!**
**எண்ணி எண்ணிப் பார்த்தேன் – அவன்தான்**
**யாரெனச் சிந்தை செய்தேன்!**
**கண்ணன் திருவுருவம் – அங்ஙனே**
**கண்ணின்முன் நின்றதடி!''**

சீதாவுக்கும் சௌந்தரராகவனுக்கும் நடந்த சம்பாஷணையை ஐந்தாவது தடவையாகக் கேட்டுக் கொண்டிருந்த லலிதாவின் மனம் புயல் அடிக்கும்போது அலைகடல் பொங்குவதுபோலப் பொங்கியது. தன் மணாளன் பட்டாபிராமன் தன்னிடம் இப்படியெல்லாம் காதல் புரிவான, இவ்வாறெல்லாம் அருமையாகப் பேசுவான என்று அவள் உள்ளம் ஏங்கியது. அந்த எண்ணத்தைச் சட்டென்று மாற்றிக் கொண்டு, ''சீதா! நீ துஷ்யந்தனைப் பற்றிச் சொன்னயே, அது மட்டும் சரியல்ல. சகுந்தலை துஷ்யந்தன் கதை எனக்கு ரொம்பப் பிடிக்கிறது. துஷ்யந்தன் பெரிய சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி. அவன் ரிஷி ஆசிரமத்தில் வளர்ந்த தாய் தகப்பன் அறியாத பெண்ணை மணந்து கொண்டானே? அது ஆச்சரியமில்லையா?'' என்றுள் லலிதா.

'' அது ஆச்சரியந்தான். ஆனல் அதைப்போல் எத்தனையோ நடந்திருக்கிறது. அனர்கலி கதை உனக்குத் தெரியுமா? லலிதா! 'மங்கையர்க்கரசியின் காதல்' என்னும் புத்தகத்தில் அந்த அற்புதமான கதை இருக்கிறது'' என்றுள் சீதா.

'' எனக்குத் தெரியாதே! அது என்ன கதை, சொல்லு!''

''அக்பர் பாதுஷாவின் பிள்ளை ஸலீம் தன்னை இளம் பிராயத்தில் வளர்த்த தாதியின் வளர்ப்புப் பெண்ணைக் காதலித்தான். அவளையே கல்யாணம் செய்து கொள்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தான். அரண்மனை நந்தவனத்தில் அவர்கள் பேசிக் கொண்டிருந்ததைப் பக்கத்திலிருந்த ரோஜாப் பூப் புதர் மறைவிலிருந்து அக்பர் பாதுஷா கேட்டுக் கொண்டிருந்தார். அவருக்குப் பிறகு பட்டத்துக்கு வர வேண்டிய குமாரர் ஒரு தாதியின் வளர்ப்புப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதா என்று அவருக்கு ஆத்திரம் பொங்கிற்று. உடனே அனார்கலியைப் பிடித்துச் சிறையில் அடைக்க உத்தரவு போட்டுவிட்டார். 'அனார்கலி' என்றால் பாரஸீக மொழியில் 'மாதுளை மொக்கு' என்று அர்த்தமாம். அது ஸலீம் அவளுக்கு அளித்த செல்லப் பெயர். சிறையில் அடைபட்ட அனார்கலி ஸலீமையே நினைத்து உருகிக் கொண்டிருந்தாள். அவன் தன்னை வந்து விடுவிப்பான், விடுவித்து மணம் புரிந்து கொள்வான் என்று ஆசையோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அக்பர் பாதுஷா செத்துப் போய் ஸலீம் பட்டத்துக்கு வருவதற்கு வெகு காலம் ஆயிற்று. கடைசியில் ஸலீம் சக்கரவர்த்தி ஆனதும் முதல் காரியமாக அனார்கலியை விடுதலை செய்யப் போனான். அதற்குள் அனார்கலிக்குச் சித்தப்பிரமை பிடித்துவிட்டது. ஸலீமை அவளால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. 'உங்களையெல்லாம் இங்கே யார் வரச் சொன்னார்கள்? என்னை விடுதலை செய்ய நீங்கள் யார்? ஸலீம் வந்து என்னை விடுவிக்கப் போகிறார். அதுவரை நான் இங்கேயே இருப்பேன்' என்றாள். இதைக் கேட்டு ஸலீம் மனம் உடைந்து போனான். அனார்கலியும் பிறகு சீக்கிரத்தில் இறந்து போனாள்.''

இதைக் கேட்டபோது லலிதாவின் கண்களில் கண்ணீர் ததும்பி வழிந்தது.

''ஏனடி அழுகிறாய், அசடே?'' என்றாள் சீதா.

''எனக்கென்னமோ, வருத்தமாயிருக்கிறது அம்மா! அவர்களுடைய உண்மையான காதல் எதற்காக இப்படித் துக்கத்தில் முடிய வேண்டும்?'' என்றாள் லலிதா.

''காதல் கதைகள் அநேகமாக அப்படித்தான் முடிகின்றன.* ரோமியோ... ஜூலியட் கதையைப் பாரேன்! அவர்களுடைய காதலைப் போல் உலகத்திலேயே கிடையாது. ஆனால், கடைசியிலே இரண்டு பேரும் செத்துப் போகிறார்கள்.''




''ஏண்டி உஷா நீ போட்டுண்டிருக்கிற இந்தக் கொண்டைக்கு என்ன பெயர்?''

'''லவ் ஜேட்' கொண்டைன்னு பெயர் மாமி!''

''இரண்டு பேரும் ஒரு வழியாகச் செத்துப் போய்விட்டால் பாதகமில்லை, சீதா! ஒருவர் செத்து ஒருவர் இருந்தால் எவ்வளவு கஷ்டமாயிருக்கும்? ஸலீமைப் பார்! பிறகு அவன் தானே ஜஹாங்கீர் பாதுஷா ஆகி நூர்ஜஹானைக் கல்யாணம் செய்து கொண்டான்? நூர்ஜஹான் உலகத்தில் எவ்வளவு பிரசித்தமான அழகியாய் இருந்தால் என்ன? அதற்காக, அவனால் அனார்கலியை எப்படி மறக்க முடிந்தது?''

''சில புருஷர்கள் அப்படித்தான், லலிதா! ஆனால் எல்லோரும் அப்படியில்லை. ஜஹாங்கீரின் மகன் ஷாஜஹானைப் பார்! அவன் மும்தாஜ்மகால் என்பவளைக் கல்யாணம் செய்து கொண்டான். அவள் செத்துப் போன பிறகும் அவளை ஷாஜஹான் மறக்கவில்லை. அவளுடைய ஞாபகார்த்தமாகத் தாஜ்மகால் கட்டினான். தன் அரண்மனையிலிருந்து எப்போதும் தாஜ்மகாலைப் பார்த்துக் கொண்டேயிருந்தான். பார்த்துக் கொண்டே செத்துப் போனான். இந்தக் காதல் ரொம்ப உயர்வாயில்லையா, லலிதா!''

''உயர்வுதான்; ஆனாலும் சாவித்திரி சத்யவான் கதைதான் எனக்கு எல்லாவற்றிலும் அதிகம் பிடித்தது. ராஜ்யம் இழந்து காட்டுக்கு வந்து குருட்டுத் தாய் தந்தையருக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்த சத்தியவானைச் சாவித்திரி காதலித்தாள். ஒரு வருஷத்துக்குள் சத்தியவான் செத்துப் போய் விடுவான் என்று தெரிந்தும் அவ

---

* அலைஓசையில் வரும் இக் காட்சியை ஓவியர் வினு அட்டையில் வண்ணப்படமாகத் தருகிறார்.

னுடைய உறுதி மாறவில்லை. யமனுடனேயே வாதாடிப் போன உயிரைக் கொண்டு வந்தாள். இதுவல்லவா உண்மையான காதல்? லேலா மஜ்னூ, அனார்கலி கதைகளைவிட நம் தமிழகத்துக் கதைகள் உயர்ந்தவைதான்.''

''அப்படி நம் நாட்டில் கதைகள் என்று பார்த்தால், சுப்பிரமணிய ஸ்வாமிக்கும் வள்ளிக்கும் நடந்த காதல் கல்யாணத்தைப்போல் ஒன்றுமே கிடையாது. வள்ளி குறப் பெண்; சுப்பிரமண்யரோ சாக்ஷாத் பரமசிவனுடைய குமாரர்; தேவசேனாபதி. அப்பேர்ப்பட்டவர் குறவர் குடிசையைத் தேடி வந்து வள்ளியை மணந்து கொண்டார் என்றால், அது எப்பேர்ப்பட்ட அதிசயம்? மணந்தது மட்டுமா! ஒவ்வொரு சிவன் கோயிலிலும் சுப்பிரமணியர் தமக்குப் பக்கத்தில் வள்ளியையும் வைத்துக் கொண்டிருக்கிறார். கேவலம் ஒரு குறத்தியை எல்லாரும் கும்பிடும் தெய்வமாக்கி விட்டார்! உண்மையான காதலுக்கு இதைக் காட்டிலும் வேறு என்ன கதை இருக்கிறது? லலிதா! சுப்பிரமணிய சுவாமி — வள்ளி கதை எனக்கு ரொம்பவும் பிடிக்கும். சுப்பிரமணிய சுவாமியைப் பற்றி ஒரு பாட்டுப் பாடுவாயே? அதைக் கொஞ்சம் பாடேன்'' என்றான்.

லலிதா பின்வரும் காவடிச் சிந்தைப் பாட ஆரம்பித்தாள்:

''பாளை வாய்க் கமுகில் வந்தூர்
வாளை பாய் வயல் சூழ்செந்தூர்
பாலனம் புரியவந்த புண்ணியா

சீதா குறுக்கிட்டு, ''இது இல்லை, லலிதா! 'பொன் மயில்' என்று ஒரு பாட்டுப் பாடுவாயே? அதைப் பாடு! பாடு!'' என்று சொன்னாள். ''சரி'' என்று சொல்லி லலிதா ஆரம்பித்தாள்.

''பொன் மயில் ஏறி வருவான் – ஐயன்
பன்னிருகையால் தண்ணருள் சொரிவான்
(பொன்)

செங்கதிர் வேலன் செஞ்சுருள் பாலன்
மங்கை வள்ளி மணாளன்
பங்கயத்தாளன் நீள தயாளன் (பொன்)

புன்னகை தன்னுல் இன்னல்கள் தீர்ப்பான்
புன்மை இருள் கணம் மாய்ப்பான்
கன்னலின் இனிய தண்தமிழ் அளிப்பான்''
(பொன்)

பாட்டு முடியுந்தருணத்தில், ''பலே பேஷ்! லலிதா நீ இவ்வளவு நன்றாய்ப் பாடுகிறாயே? அன்றைக்கு மதராஸ்காரர்கள் வந்தபோது மட்டும் பாடவே மாட்டேன் என்று வாயை இறுக மூடிக் கொண்டாயே? அது ஏன்?'' என்று கேட்டுக் கொண்டே சூரியா உள்ளே வந்தான். அவனைத் தொடர்ந்து ராஜம்மாளும் வந்தாள்.

சூரியாவுக்குச் சீதா, பதில் சொன்னாள். ''அன்றைக்கு அவளுக்குப் பாடப் பிடிக்கவில்லை. அதனால் பாடவில்லை. நாளைக்குக் கல்யாணத்தின்போது பார்! 'மாமவ பட்டாபி ராமா' கீர்த்தனம் பாடுகிறேன் என்று சொல்லியிருக்கிறாள்!'' என்றாள்.

சூரியா, ''சபாஷ் அதுதான் சரி! பட்டாபிராமனுக்கு அப்படித்தான்— பட்டாபிஷேகம் செய்ய வேண்டும்!'' என்றான்.

''லலிதாவுக்கு நான் நளன்–தமயந்தி கதை சொல்கிறேன்'' என்று கூறிவிட்டுச் சீதா லலிதாவைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு பங்களாவை விட்டு வெளியேறினாள். அந்தரங்கம் பேசக்கூடிய ஏகாந்தமான இடத்தைத் தேடி அவர்கள் சென்றார்கள்.

• • •

லலிதாவும் சீதாவும் போன பிறகு ராஜம்மாள் சூரியாவைப் பார்த்து, ''குழந்தை! சாலையோரத்திலே தபால்காரனோடு சண்டை போட்டுக் கொண்டிருந்தாயே, அது எதற்காக? எனக்கு என்னமோ சந்தேகமாயிருக்கிறது. என்னிடம் உண்மையைச் சொல்லு!'' என்றாள்.

''அத்தை! அவசியம் சொல்லித்தான் தீர வேண்டுமா? அது உங்கள் சம்பந்தமான விஷயந்தான. கேட்டால் ஒருவேளை உங்களுக்கு வருத்தமாயிருக்கும். ஏற்கனவே உங்களுக்கு எவ்வளவோ கவலை. மேலும் உங்களைத் துன்பப்படுத்துவானேன் என்று சொல்ல வேண்டாமென்று பார்த்தேன்!'' என்றான் சூரியநாராயணன்.

''அப்பா, சூரியா! இனிமேல் என் மனத்தை வருத்தப்படுத்தக்கூடிய விஷயம் உலகில் ஒன்றுமே இருக்க முடியாது. எத்தனையோ வருத்தங்களையும் கஷ்டங்களையும் அநுபவித்து அநுபவித்து என் மனத்தில் சுரணையே இல்லாமல் போய்விட்டது. எவ்வளவு வருத்தமான விஷயமாயிருந்தாலும் என்னை ஒன்றும் செய்துவிடாது. தயங்காமல் சொல்லு!'' என்றாள்.

## 33. அத்தையும் மருமகனும்

சூரியா சற்று நேரம் அல்லிக் குளத்தையும் அதற்கப்பாலிருந்த சவுக்கமரத் தோப்பையும் பார்த்துக் கொண்டிருந்துவிட்டுக் கூறினான்: பார்க்கப் போனால், அப்படியொன்றும் பிரமாத விஷயம்

# அன்னத்தின் மென்னழகு மின்னிடும் உங்கள் முகத்தில்...

SKYLARK

மென்துகிலாய் பொலியும் போலிமி புடவைகள், ஜார்ஜெட்டுகள், வைல்ஸ்கள் சாதாரண மற்றும் பிரிண்டுகள் - போலிமி புடவைகள் - பெண்மைக்கனிக்கும் சீர் வரிசைகள். மதிமயக்கும் உடுப்புத் துணிகள் - ஆண்களுக்கும் பெண்களுக்கும் போலிமியின் கைவரிசை.



**தி பாம்பே ஸில்க் மில்ஸ் லிட்.,**

இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், லால்பாக், பம்பாய்-12.

மெஸர்ஸ் G. I. மிர்புரி, 137, பீமசேன கார்டன் ரோடு, மயிலாப்பூர், சென்னை - 4

மெஸர்ஸ் ரமண்லால் D. ஷா, மெஜட்டி பிரதர்ஸாத ராவ் பில்டிங், இரண்டாவது மாடி 11-25. 15, கொத்தபேட், விஜயவாடா - 1

மெஸர்ஸ் KN. பரமசிவன், 108, தெற்கு ஆவணி மூல வீதி, மதுரை - 1

மெஸர்ஸ் யுனிவர்ஸல் டிரேடிங் கார்ப்பொரேஷன், தேவஸ்தா மார்க்கெட், சிக்பேட், பெங்களூர்-2A

சர்வோதயா கார்ப்பொரேஷன், 12, கைலாஸ் மார்க்கெட், செகந்திராபாத் - 3

இல்லை. வருத்தப்படுவதற்கு அவசியமும் இல்லை. மொட்டைக் கடிதம் என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அதாவது கையெழுத்து, காலெழுத்து ஒன்றும் இல்லாத கடிதம். பொறாமையினாலும் துவேஷத்தினாலும் நல்ல காரியத்தைக் கெடுப்பதற்காகச் சிலர் அப்படிக் கடிதம் எழுதுவதுண்டு. அந்த மாதிரி கடிதம் உங்களுக்கு வந்திருக்கிறது. அத்தை! அதைத் தபால்கார பாலகிருஷ்ணன் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தான். பெரிய போக்கிரி அவன். அதனாலே தான் சண்டை போட்டேன்.''

''நான்கூட அந்தப் பையனை இங்கே அடிக்கடி பார்த்திருக்கிறேன்! நல்ல பிள்ளையாய்த் தோன்றினான்! அவன் விஷயம் இருக்கட்டும்.... கடிதத்தில் என்ன எழுதி யிருந்தது. அதைச் சொல்லு!''

''என்னமோ கன்னாபின்னா என்று எழுதியிருந்தது! அதைச் சொல்லத் தான் வேண்டுமா அத்தை!''

''யாரைப் பற்றி என்ன எழுதியிருந்தது? உன் அத்திம்பேரைப் பற்றியா? அல்லது என்னைப் பற்றியா?''

''உங்கள் இருவரைப்பற்றியுமில்லை!''

''அப்படியானால் சீதாவைப்பற்றியா? எந்தப் பாவி என்ன எழுதியிருந்தான்?.....'' என்று ராஜம்மாள் கூறிய போது அவளுடைய குரலில் அளவில்லாத கோபம் கொதித்தது; முகத்தில் ஆக்ரோஷம் பொங்கியது.

''இல்லை, இல்லை! சீதாவைப் பற்றியும் இல்லை. சீதாவைப் பற்றி எழுத என்ன இருக்கிறது? என்ன எழுத முடியும்? அத்தை! நீங்கள் எவ்வளவோ கஷ்டங்களை அநுபவித்திருக்கிறீர்கள் என்று எனக்குத் தெரியும். ஆனாலும், சீதாவைப் போன்ற ஒரு பெண்ணை நீங்கள் பெற்றது உங்களுடைய பாக்கியந்தான்!''

ராஜம்மாளின் முகம் மறுபடியும் மலர்ந்தது. ''சீதாவைப் பற்றியும் ஒன்றும் இல்லையா? பின்னே யாரைப் பற்றி என்ன எழுதியிருந்தது?'' என்று கேட்டாள்.

''சீதாவுக்கு வரன் பார்த்து முடிவு செய்திருக்கிறோமே, அந்த மாப்பிள்ளையைப் பற்றித்தான் எழுதியிருந்தது!''

''என்ன சூரியா! மாப்பிள்ளையைப் பற்றி என்ன எழுதியிருந்தது?'' என்று ராஜம்மாள் பரபரப்போடு கேட்டாள்.

''அதைச் சொல்வதற்கே எனக்குக் கஷ்டமா யிருக்கிறது, அத்தை! ஆனாலும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியதுதானே? ராகவன் பம்பாயிலே ஏற்கனவே ஒரு பெண்ணுடன் சிநேகம் வைத்துக் கொண்டிருந்தானாம். அவள் ஒரு நாள் பத்மாபுரத்துக்கு வந்து அவனோடு சண்டை போட்டு ரகளை பண்ணி விட்டாளாம். ஊரெல்லாம் சிரித்ததாம். இன்னும் அவன் இப்படிப்பட்டவன், அப்படிப்பட்டவன் – அவனுக்குப் போய்ப் பெண்ணைக் கொடுக்கலாமா என்று எழுதியிருந்தது.''

ராஜம்மாள் பெருமூச்சு விட்டாள். சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். பின்னர், ''இவ்வளவுதானா? இன்னும் ஏதாவது உண்டா?'' என்று கேட்டாள்.

''மாப்பிள்ளையின் தாயாரையும், தகப்பனாரையும் பற்றிக் கேவலமாய் எழுதியிருந்தது. அந்தப் பிராமணர் ரொம்பப் பணத்தாசை பிடித்தவராம். அந்த அம்மாள் ரொம்பப் பொல்லாதவளாம். முதல் நாட்டுப் பெண்ணை ரொம்பப் படுத்தியபடியால் அவள் பிறந்த வீட்டோடு போய்விட்டாளாம். பிற்பாடு அவள் புருஷனும் அவளோடு போய்விட்டானாம். இப்படிப்பட்ட சம்பந்தம் உங்களுக்கு எதற்காக என்று எழுதியிருந்தது.''

ராஜம்மாள் மறுபடியும் சிறிது நேரம் யோசனை செய்து விட்டு, ''சூரியா! இன்னும் ஏதாவது உண்டா?'' என்றாள்.

''வேறு முக்கியமாக ஒன்றும் இல்லை. 'இந்த மாதிரி இடத்தில் பெண்ணைக் கொடுப்பதை விடக் கிணற்றிலே பிடித்துத் தள்ளிவிடலாம்', என்றும், 'கிளியை வளர்த்துப் பூனையிடம் கொடுக்க வேண்டாம்' என்றும் இம்மாதிரி ஒரே பிதற்றலாக எழுதி யிருந்தது. அத்தை! உங்கள் பெயருக்கு இனிமேல் கடிதம் வந்தால் என்னிடமே கொடுக்கும்படி பாலகிருஷ்ணனிடம் சொல்லி யிருக்கிறேன். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? இனிமேல் கடிதம் வந்தால் உங்களிடமே கொடுக்கச் சொல்லிவிடட்டுமா?''

''சூரியா! உனக்கு வயது அதிகமாகாவிட்டாலும் நல்ல யோசனைக்காரனாக இருக்கிறாய். மன்னிகூட அடிக்கடி இதைப் பற்றிச் சொல்லிச் சந்தோஷப்படுகிறாள். 'என் மூத்த பிள்ளை கங்காதரன் ஒரு மாதிரிதான். அவனுக்குக் குடும்பத்தின் விஷயத்தில் அவ்வளவு அக்கறை போதாது. தங்கைக்குக் கல்யாணம் நாலு நாட்கள்தான் இருக்கிறது. இன்னும் வந்து சேரவில்லை, பாருங்கள். அடுத்தாற்போல் சூரியா எவ்வளவு பொறுப்பாக எல்லாக் காரியமும் செய்கிறான்!' என்று இன்று காலையில்கூட உன் அம்மா சொல்லிச் சந்தோஷப்பட்டாள். உன் அம்மா சொன்னது ரொம்பச் சரியான விஷயம். உன்னிடம்தான் நானும் யோசனை கேட்கப் போகிறேன். இந்தக் கடிதத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய் சூரியா? அதில் உள்ளது

உண்மையாக இருக்கும் என்று உனக்குத் தோன்றுகிறதா?'' என்று கேட்டாள் ராஜம்மாள்.

''நான் அப்படி நினைக்கவில்லை, அத்தை! யாரோ பொறாமை காரணமாக எழுதியிருப்பதாகவே நினைக்கிறேன். அதற்காகக் கல்யாணத்தைத் தடங்கல் செய்வது சரியல்ல என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ, என்னமோ? மேலும் அத்திம்பேருக்கு இதெல்லாம் தெரிந்தால் என்ன சொல்லுவாரோ, என்னமோ? அவர் இன்னும் வந்து சேரவில்லையே?''

''அத்திம்பேரிடமிருந்து நாலு நாட்களுக்கு முன்னால் கடிதம் வந்தது. கல்யாணத்துக்கு முதல் நாள் வந்து சேர்ந்துவிடுவதாக எழுதி யிருக்கிறார். டில்லியில் மாப்பிள்ளையைப் பற்றி விசாரித்தாராம். மிகவும் திருப்திகரமாகச் சொன்னார்களாம். ரொம்பக் கெட்டிக்காரன் என்று பெயர் வாங்கியிருப்பதாகவும் மேல் உத்தியோகஸ்தர்களுக்கு மாப்பிள்ளை பேரில் ரொம்பப் பிரியம் என்றும் சம்பளம் இரண்டாயிரம் ரூபாய் வரையில் ஆகும் என்றும் சொன்னார்களாம்.''

''அத்தை! நான் சொன்னது சரிதானே? யாரோ பொறாமைக்காரர்கள்தான் இப்படி யெல்லாம் எழுதியிருக்க வேண்டும்.''

''இந்தக் காலத்தில் நல்ல வரன் கிடைப்பது எவ்வளவோ கஷ்டமாக இருக்கிறது. எத்தனையோ பேர் இப்படிப்பட்ட நல்ல வரனுக்குப் பெண்ணைக் கொடுக்க வந்திருப்பார்கள். கல்யாணம் நிச்சயமாகாதபடியால் அவர்கள் பொறாமைப்பட்டு எழுதி யிருக்கலாம்.''

''அப்படித்தான் இருக்கும்; சந்தேகமில்லை.''

''மாமியார், மாமனார் விஷயங்கூட விசாரித்தேன். காமாட்சி அம்மாள் பேரில் ஒரு பிசகும் இல்லை என்றும், மூத்த நாட்டுப் பெண்தான் ரொம்பப் பொல்லாதவள் என்றும் தெரிந்தது. புருஷன் வீட்டில் இருக்க மாட்டேன் என்று சொல்லி விட்டு எப்போது பிறந்தகத்துக்குப் போனாளோ, அப்போதே குணம் சரியில்லை என்று தெரியவில்லையா? 'என்னோடு வந்து எங்க அப்பா வீட்டில் இருந்தால் இரு; இல்லாவிட்டால் நீ எனக்குப் புருஷன் இல்லை' என்று சொல்லி விட்டாளாம். அவள் எப்பேர்ப்பட்ட ராட்சஸியாக இருக்க வேண்டும்!''

''தாடகை — சூர்ப்பனகை போன்றவளாய்த்தான் இருப்பாள்!''

''ஒருவேளை அந்தப் பெண்ணே விஷமத்துக்காக இப்படி யெல்லாம் யாரையாவது கொண்டு எழுதச் சொல்லியிருக்கலாம்.''

''அப்படியும் இருக்கக் கூடும்!''

''ஆகக்கூடி, கல்யாணத்தை நடத்தி விட வேண்டும் என்றுதானே நீயும் நினைக்கிறாய், சூரியா!''

''கட்டாயம் நடத்தியேதான் தீர வேண்டும். இவ்வளவு ஏற்பாடு நடந்த பிறகு இனிமேல் ஒரு நாளும் பின் வாங்கக் கூடாது.''

''அப்படியே அந்தக் கடிதத்தில் எழுதியிருப்பதில் ஏதாவது உண்மையாயிருந்தாலும் நாம் என்ன செய்ய முடியும் சூரியா? இந்த உலகத்தில் நாமாகச் செய்யக்கூடியது என்ன இருக்கிறது? பகவானுடைய சித்தம் எப்படியோ அப்படித்தான் எதுவும் நடக்கும். சீதா இந்த உலகத்தில் சந்தோஷமாயும், சௌக்கியமாயும் இருக்க வேண்டும் என்று பராசக்தியின் சித்தம் இருந்தால் அப்படியே நடக்கும். இந்தக் கல்யாணம் நடக்க வேண்டாம் என்பது பகவானுடைய விருப்பமா யிருந்தால் அதை யாராலும் மாற்ற முடியாது.''

''அதில் என்ன சந்தேகம், அத்தை! லலிதாவைப் பார்க்க வந்தவன் எப்போது சீதாவைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று சொன்னானோ, அதிலிருந்தே இது பகவானுடைய செயல் என்று ஏற்படவில்லையா?''

''என் மனத்தில் இருந்ததையே நீயும் சொன்னாய், சூரியா! அந்த இரண்டு மூன்று நாட்களும் எனக்கு எவ்வளவு குழப்பமா யிருந்தது தெரியுமா? மன்னியின் மனசு வேதனைப்படப் போகிறதே என்று நினைத்து நினைத்து எனக்குத் தூக்கமே வரவில்லை. நீதான் எப்படியோ உன் அம்மாவின் மனத்தைத் தேற்றிச் சரிப்படுத்தினாய். நீமட்டும் இங்கே இருந்திராவிட்டால் எல்லாம் ஒரே குழப்பமாய்ப் போய்விட்டிருக்கும். உன்னுடைய அப்பாவுக்குக்கூட அன்றைக்கு ஆங்காரம் வந்து விட்டது. நீதான் அந்த வக்கீல் வீட்டுப் பிள்ளையைப் பற்றி உடனே எடுத்துச் சொல்லி அண்ணாவையும் சாந்தப்படுத்தினாய். நீ இங்கே வந்திராவிட்டால் எப்படி ஆகிப் போயிருக்கும்? இதைப்பற்றி யோசிக்க யோசிக்க என் மனத்தில் இது பகவானுடைய சித்தத்தினால் நடைபெறுகிறது என்று நிச்சயம் ஏற்பட்டிருக்கிறது.''

''யாரோ அசூயை பிடித்தவர்கள் மொட்டைக் கடிதம் எழுதுவதற்காகக் கடவுளுடைய விருப்பத்துக்கு நாம் தடங்கல் செய்வதா? கூடவே கூடாது!''

''என் எண்ணமும் அதுதான் சூரியா! நீ அந்தத் தபால்காரப் பையன் பாலகிருஷ்ணனிடம் செய்திருக்கும் ஏற்

பாடுதான் நல்லது. யார் யாரோ எழுதும் பொய்க் கடிதங்களைப் படித்து என் மனத்தைக் கெடுத்துக் கொள்வானேன்? என் பெயருக்கோ, சீதா பெயருக்கோ வரும் கடிதங்களை யெல்லாம் நீயே வாங்கிக்கொள். படித்து விட்டு எங்களிடம் கொடுக்கக் கூடியதாயிருந்தால் கொடு; இல்லாவிட்டால் கிழித்து எறிந்துவிடு. இன்னும் உன் அப்பாவுக்கு வரும் கடிதங்களைக் கூட நீ வாங்கிப் படிப்பது நல்லது. எனக்கு எழுதியது போல் அண்ணாவுக்கும் யாராவது எழுதி, அவருடைய மனசும் கலங்கிப் போகலாம் அல்லவா?''

''ஆம், அத்தை! அப்பாவுக்கு வரும் கடிதங்களைக் கூட நானே வாங்கிப் பார்ப்பது என்றுதான் எண்ணி யிருக்கிறேன்.''

''சூரியா! நீ செய்யும் உதவிக்கு நான் என்ன பதில் செய்யப் போகிறேன்! நீ என்றைக்கும் சௌக்கியமாய் இருக்க வேண்டும். உனக்குப் பெரிய உத்தியோகம் ஆக வேண்டும் என்று பகவானைப் பிரார்த்தனை செய்கிறேன்.''

''பெரிய உத்தியோகமா? எனக்கா? அந்த மாதிரி ஆசையெல்லாம் எனக்குக் கிடையாது, அத்தை! நாம் பிறந்த தேசத்துக்காகப் பாடுபட வேண்டும், ஏழை எளியவர்களுக்கு உழைக்க வேண்டும் என்பதுதான் என் மனத்தில் உள்ள ஆசை. பெரிய உத்தியோகம் பண்ண வேண்டும் என்றோ, நிறையப் பணம் சம்பாதிக்க வேண்டும் என்றோ எனக்கு ஆசை கிடையாது. பரோபகாரத்துக்காகப் பாடுபடும் மனமும் சக்தியும் எனக்கு ஏற்பட வேண்டும் என்று ஆசீர்வாதம் செய்யுங்கள், அத்தை!''

''சூரியா! நீ இந்த வயதிலேயே இவ்வளவு பரோபகாரியாக இருக்கிறாயே? பெரியவன் ஆகும்போது எவ்வளவோ பரோபகாரம் செய்வாய். ஆனால், நம் சொந்தக் காரியத்தையும் கொஞ்சம் பார்த்துக் கொள்ள வேண்டும்.''

''அது சரிக்கட்டி வராது, அத்தை! சொந்தக் காரியத்தைக் கவனித்தால் பரோபகாரம் செய்ய முடியாது. பரோபகாரம் செய்தால்,சொந்தக்காரியம் கெட்டுத்தான் போகும்!'' என்றான் சூரியா.

சற்று நேரம் குளத்தங்கரைப் பங்களாவில் மௌனம் குடி கொண்டிருந்தது. அந்த மௌனத்தினிடையே சவுக்குமரத் தோப்பில் காற்றுப் புகுந்து அடிக்கும் சத்தம் கடல் அலைச் சத்தத்தைப் போலக் கேட்டது.

''அத்தை! முன்னொரு நாள் இந்த அலை ஓசை போன்ற சத்தத்தைக் கேட்டு நீங்கள் பயந்தீர்கள். காரணம் அப்புறம் சொல்கிறேன் என்றீர்கள்'' என்றான் சூரியா.

அப்போது ராஜம்மாவின் முகத்தை மேகத் திரை மறைப்பது போலத் தோன்றியது.

''சொல்லுகிறேன், சூரியா! இந்த நிமிஷத்தில் நானும் அதைச் சொல்ல வேண்டும் என்றே எண்ணினேன். இங்கு வருவதற்கு முன்னால் பம்பாயில் நான் வியாதிப்பட்டுப் படுக்கையாய்க் கிடந்தேன் அல்லவா? அப்போது சுர வேகத்தில் என்னவெல்லாமோ பிரமைகள் எனக்கு உண்டாகும். காணாத காட்சிகளை யெல்லாம் காண்பேன். அவற்றில் சில காட்சிகள் இன்பமாயிருக்கும். சில பயங்கரமா யிருக்கும். நானும் சீதாவும் சமுத்திரக் கரையில் நிற்கிறோம். சீதா, சமுத்திரத்தில் இறங்கிப் போகிறாள். 'போகாதேடி! போகாதேடி!' என்று நான் கத்துகிறேன். 'ஓ' என்ற அலை ஓசையினால் நான் கத்தும் குரல் அவள் காதில் விழவில்லை. மேலும் சமுத்திரத்தில் போய்க் கொண்டிருக்கிறாள். திடீரென்று ஒரு பெரிய அலை வந்து அவள் மேல் மோதுகிறது. அவளைக் காப்பாற்றுவதற்காக நானும் கடலில் இறங்குகிறேன். எனக்கு நீந்தத் தெரியுமல்லவா? அலைகளை எதிர்த்துச் சமாளித்துக் கொண்டு நீந்திப் போகிறேன். ஆனால் கண்ணுக்கெட்டிய தூரம் கடலும் அலையுமாயிருக்கிறதே, தவிர, சீதா இருந்த இடமே தெரியவில்லை. அலைகளின் பேரிரைச்சலுக்கு மத்தியில் 'சீதா! சீதா!' என்று அலறுகிறேன். என்னுடைய கைகளும் களைத்துப் போய் விடுகின்றன. அந்தச் சமயத்தில் கையில் ஏதோ தட்டுப் படுகிறது. அது சீதாவின் கைதான். அவளுடைய கையைப் பிடிக்கிறேன். வளை உடைகிறது; கை நழுவப் பார்க்கிறது. ஆனாலும் நான் விடவில்லை. கெட்டியாய்ப் பிடித்துக் கொள்கிறேன் ..... இம்மாதிரி பல தடவை கண்டேன், சூரியா! ஒவ்வொரு தடவையும் சீதாவின் கையைப் பிடித்துக்கொள்ளும் சமயத்தில் பிரக்ஞை வந்துவிடும். அவ்வளவும் உண்மையாக நடந்ததுபோலவே இருக்கும். இன்றும் அதை நினைத்தால் எனக்குப் பீதி உண்டாகிறது. உடம்பு நடுங்குகிறது. சவுக்குத் தோப்பின் சத்தத்தைக் கேட்டாலும் அந்த ஞாபகம் வந்து விடுகிறது.''

சற்று நேரம் பொறுத்துச் சூரியா, ''இதை யெல்லாம் சீதாவிடம் எப்போதாவது சொன்னீர்களா?'' என்று கேட்டான்.

''ஆமாம், சொன்னேன்! அவளை ஜாக்கிரதையாக இருக்கும்படியும் சொல்லி யிருக்கிறேன்.''

''அத்தை! இதை நீங்கள் சீதாவிடம் சொல்லியிருக்கக் கூடாது!'' என்றான் சூரியா.

(தொடரும்)

# விலைவாசி உயர்வு!

இன்றைய பிரச்னை 4

(ஏழை மக்களும், நடுத்தரக் குடும்பங்களும் குடும்ப வரவு செலவைச் சரிக்கட்ட முடியாமல் தத்தளிக்கிறார்கள்: விலைவாசிகள் உச்சாணிக் கிளையில் ஏறிக் கொண்டிருப்பது ஏன்? இதை இறக்க என்ன வழி? என்பது குறித்து திரு எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி (ஐ.சி.எஸ்.)யிடம் கேட்கிறோம்.) □

**பசுமைப் புரட்சிக்குப் பிறகும் அரிசி இந்த விலை விற்பானேன்?**

பசுமைப் புரட்சியின் பலனாக விளைச்சல் கூடுதலாகியுள்ளது. ஆனால், விவசாயத்துக்குத் தேவையான உரத்தின் விலை அதிகமாயிருக்கிறது. முன்பு ஜோடி ரூ. 200க்கு வாங்க முடிந்த உழவுக் காளைகள் இன்று ஜோடி ரூ. 1500 முதல் ரூ. 2000 வரை விற்கிறது. டிராக்டர், டீசல் என்



ணெய் விலை கூடுதலாகியுள்ளது. எனவே அரிசி விலையும் கூடுதலாகியுள்ளது. ஆனால் விலை உயர்வினால் ஏற்பட்ட பலனை விவசாயி முழுவதுமே பெற்றுவிடவில்லை...

**ஏன்? இடையில் யாரோ சிலர் லாபத்தில் ஒரு பகுதியை அபகரித்துக் கொண்டு விடுகிறார்களோ?**

ஆமாம்; கணிசமான பகுதி, அரிசியை விலை கொடுத்து வாங்குபவருக்கும் விவசாயிக்கும் இடையேயுள்ள (Middle men) சிலருக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறது.

தஞ்சை மாவட்டத்தில் நெல் மூட்டை ரூ. 31 விற்கிறது. இரண்டேகால் மூட்டை அல்லது அதிகபட்சம் இரண்டரை மூட்டை நெல் அரைத்தால் ஒரு மூட்டை அரிசியாகும். அதாவது அரை கூலி உட்பட ஒரு மூட்டை அரிசி ரூ. 80 ஆகிறது. தஞ்சையிலிருந்து சென்னைக்கு வந்து சேர மூட்டைக்கு ரூ. 8 ஆகிறது என்றாலும், சென்னையில் ஒரு மூட்டை அரிசி ரூ. 88 அல்லது 90க்குக் கிடைக்க வேண்டுமல்லவா? ஆனால் எங்கே கிடைக்கிறது? — மூட்டை ரூ. 130 வரை விற்கிறதே!

**ஆக, மூட்டைக்கு ரூ. 40 விதம் நடுவில் யாரோ சிலர் லாபம் அடைகிறார்கள். அப்படித்தானே?**

ஆமாம். ஆனால், மற்ற பொருள்களுடன் ஒப்பிடும் போது அரிசி, கோதுமையின் விலை அவ்வளவாக உயர்ந்து விட்டது என்று கூறுவதற்கில்லை. நடுவில் சிலர் லாபமடைவது தடுக்கப்பட்டால் அரிசி விலை கணிசமாகக் குறையும்.

**இன்று நியாயமாக அரிசியை என்ன விலைக்கு விற்றால் விவசாயிக்கும் லாபம் கிடைக்கும், வாங்கும் மக்களுக்கும் பளு அதிகமிராது என்று நினைக்கிறீர்கள்?**

படி ரூபாய் இரண்டு அல்லது அதிகமாகப் போனால் இரண்டரை ரூபாய்க்கு விற்றால் (உயர்ந்த ரக அரிசி) அதனை நியாய விலை என்று கூறலாம். உற்பத்தி அதிகமாகியுள்ள நாள் இன்று விற்கிற விலைக்கு நியாயமே இல்லை. அதிலும் கடந்த ஒன்றரை அல்லது இரண்டு ஆண்டுகளில் விலை மிகவும் கூடுதலாகியுள்ளது. விநியோக முறையில் உள்ள குறைபாடுதான் விலை கூடுதலாகியுள்ளதன் காரணம். இந்தியா முழுதுமே அரிசியை எவ்விதக் கட்டுப்பாடு மின்றி எந்தப் பகுதியிலிருந்து எந்தப் பகுதிக்கு வேண்டுமானாலும் கொண்டு செல்லலாம் என்ற நிலை ஏற்பட்டால் விலை குறைய வழி உண்டு.

**அப்படிப்பட்ட நிலையில் பதுக்கல் ஏற்படாதா?**

ஏற்படாது. எதற்கெடுத்தாலும் நாம் வியாபாரிகளின் மீது பழியைப் போடுவது சரியில்லை. அடிப்படைக் கொள்கையில் தவறு இருக்கும்போது வியாபாரிகளின் மீது பழியைப் போடுவது நியாயமாகாது.

**அரசு கொள்முதல் செய்வது தேவையில்லையா?**

நெருக்கடி நிலைமையைச் சமாளிக்கத் தேவையான (Buffer Stock) ஸ்டாக் கைவசம் வைத்துக் கொள்வதற்கு மட்டுமே கொள்முதல் செய்யப்பட வேண்டும். அளவுக்கு மீறி விலை ஏறினால் அந்த 'ஸ்டாக்'கிலிருந்து எடுத்து அரசு விநியோகிக்கும் என்ற பயம் வியாபாரிக்கு இருக்கும். எனவே, இப்படித் தாறுமாறாக விலை ஏறாது. இப்போது செய்யப்படுகிற அளவுக்குக் கொள்முதல் செய்தால் நிலைமை இப்படித்தான் இருக்கும்! ஒரு ரூபாய்க்குப் படி குப்பை; இரண்டு ரூபாய்க்குப் படியில் பாதிக் குப்பை; மூன்று ரூபாய்க்கு நல்ல அரிசி என்ற நிலைதான் நீடிக்கும்!. செங்கல்பட்டிலிருந்து சென்னைக்கு அரிசி வரக்கூடாது என்று தடை விதித்தாலும் போதும், சென்னையில் அரிசி விலை





''உமா, கமலா, சித்ரா, மேகலா, ராஜகுமாரி, புவனேசுவரி, சாந்தியைப் பார்த்ததில் சாந்தியைத்தான் எனக்குப் பிடிச்சது!''

''பலே! கல்யாணச் சாப்பாடு எப்போ?''

''நான் சினிமா டைரக்டர்கள் பற்றிப் பேசிண்டிருக்கேன்!''

உயர்ந்துவிடும். தடையே இல்லாமல் இருந்தால் நிச்சயம் விலை குறையும்.

**அதெப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்லுகிறீர்கள்?**

ஏன், யுத்தத்துக்கு முன்பிருந்த நிலைமை எடுத்துக் கொள்வோம். தஞ்சையிலிருந்து கேரளத்துக்கு அரிசி போய்க் கொண்டிருந்தது. நெல்லூரிலிருந்து சென்னைக்கு அரிசி தடையின்றி வரும். செங்கல்பட்டு, வட ஆர்க்காடு மாவட்டங்களிலிருந்து தென் ஆர்க்காட்டுக்குப் போகும். ஆற்றுப் பாசனத்தை நம்பியிருக்கும் மாவட்டங்களில் சாகுபடி இல்லாத பருவத்தில் ஏரிப் பாசனத்தினால் சாகுபடியாகும் பகுதிகளிலிருந்து அரிசி தடையின்றிச் செல்லும். விலையும் சீராக இருந்து வந்தது: தட்டுப்பாடும் இருந்ததில்லை. இன்று அரைகுறையாக 'கண்ட்ரோல்', தடைகள் என்றெல்லாம் இருப்பது விலை உயர்வுக்குக் காரணமாகிறது. சர்க்கரைக்குக் 'கார்டு' வழங்கமாதக் கணக்கில் ஆகிறது. பார்த்தீர்களா? அரை குறைக் கட்டுப்பாட்டின் விளைவுதானே இது?

**சர்க்கரை என்றவுடன் இனிக்கிறது. விலையைக் கேட்டால் கசக்கிறதே? கிலோ ரூ. 3-20 வரை விற்கிறதே! என்ன காரணம்?**

சர்க்கரை உற்பத்தி குறைந்து விட்டது. 1969ல் 42 லட்சம் டன் உற்பத்தி. 1970ல் 39 லட்சன் டன். சென்ற ஆண்டு 33 லட்சம் டன்தான். 42 லட்சம் டன் தேவை. தேவையைவிட 9 லட்சம் டன் உற்பத்தி குறைவாக உள்ளதால் விலை கூடிவிட்டது. இதற்குப் பல காரணங்கள். வெல்லம் விலை கூடினால் சர்க்கரை ஆலைக்குக் கரும்பு குறைவாகத்தான் கிடைக்கும். கரும்பு சாகுபடியாகும் நிலத்தின் விஸ்தீரணமும் குறைந்து விட்டது. மற்ற நாடுகளில் குறிப்பிட்ட அளவு கரும்பிலிருந்து எவ்வளவு சர்க்கரை தயாரிக்கப்படுகிறதோ, அதைவிட நம் நாட்டில் குறைவாகத் தயாரிக்கப் படுகிறது. ஆலையிலிருந்து கடன் வாங்கியுள்ள விவசாயிகூட வெல்லம் விலை அதிகரித்தால் ஆலைக்குச் சரிவரக் கரும்பு கொடுப்பதில்லை. அரை குறைக் கட்டுப்பாடு வேறு! இதெல்லாம் தான் சர்க்கரை விலை உயரக் காரணம்.

**பண்டங்களை வாங்குவோர் (Consumers) கட்டுப்பாடாக இருந்து வாங்க மறுத்தால் விலை குறைய வழியில்லையா?**

முக்கியமான பொருட்களை வாங்கித்தானே தீர வேண்டியிருக்கிறது? அரிசி, துணி மணி இவை அத்தியாவசியத் தேவை. சர்க்கரை போன்ற பொருட்களின் விலை உயர்ந்தால் மக்கள் வாங்குவதைத் தவிர்க்க வேண்டும்; அல்லது குறைக்கவாவது செய்யலாம். உபயோகிப்போர் எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டியது அவசியம். உலகில் ஐம்பது நாடுகளில் பண்டங்கள் வாங்குவோர் சங்கம் நன்கு செயல்பட்டு வருகிறது.

**நம் நாட்டில்?**

பம்பாயில் ஒரு சங்கம் உருவாகி நன்கு செயல்படத் தொடங்கியுள்ளது. பெண்மணிகளே 'தர்ணா' செய்ய முன்வருகிறார்கள். சென்னை நகரிலும் ஒன்று துவங்கியுள்ளோம். விலைவாசி உயர்வுக்குத் தனிமனிதர் எதிர்ப்பு பலனளிக்காது. இதுபோன்று ஒன்றுகூடிச் சங்கம் அமைத்து எதிர்ப்புக் குரல் எழுப்பினால்தான் பலன் உண்டு. ஆனால், ஒன்றுகூட வேண்டும்! மக்களிடையே பயம் அதிகரித்துள்ளது. எதிர்ப்புத் தெரிவிக்கப் பயப்படுகிறார்கள். வெள்ளைக்காரர்கள் ஆட்சியின் போதுகூட இல்லாத பயம் இன்று நம் மக்களை மிகவும் பீடித்து வருகிறது! என் வீட்டுக்குள் திருடன் வராதபடி நான் பந்தோபஸ்து செய்துகொள்ளும்போது நான் போலீசுக்கு எதிரி, அரசாங்கத்துக்கு எதிரி என்று எண்ணி விடுவார்களோ என்று நான் பயப்படலாமா? பண்டங்களை வாங்குவோர் விலை உயர்வை எதிர்ப்பதற்கு மாநில அரசு ஊக்கமளிக்க வேண்டும் என்று மத்திய அரசே தெரிவித்துள்ளது. இந்த நிலையிலும் மக்களுக்குப் போதிய தைரியம் இல்லாதது ஒரு பெரும் குறை.

**மக்களிடையே பணப் புழக்கம் அதிகரித்துள்ளதும் விலைவாசி உயர்வுக்குக் காரணமாகுமா?**

பணப் புழக்கம், பண வீக்கம் எல்லாந்தான் காரணம். 'கிணறு வெட்ட' என்று ரூ. 500 அரசாங்கத்திடம் கடன் வாங்கி ரூ. 300க்கு ஒரு கிணறு வெட்டுகிறார் ஒருவர். அல்லது பழைய கிணறு ஒன்றை ரூ. 100 செலவழித்துப் புதுப்பித்து விடுகிறார் என்று வைத்துக் கொள்வோம். கடன் வாங்கிய தொகை ஐந்நூறு ரூபாய். மீதமுள்ள தொகையை அவர் செலவிடத்தானே செய்வார்? இது ஓர் உதாரணமே. விலை உயர்வுக்கு இப்படிப் பல காரணங்கள். இது ஒரு விஷ வட்டம்! மக்களுக்குத் தேவையான பல பொருட்கள் உற்பத்திக் குறைவினால் விலை கூடுதலாக உள்ளன. இவற்றின் உற்பத்திக் குறைவுக்குப் பல காரணங்கள். இவைகளின் விலையேற்றம் உணவுப் பண்டங்களின் விலை உயர்வுக்குக் காரணம். இந்த விஷ வட்டத்தின் அடிப்படைக் காரணங்களைப் போக்க வேண்டும்.

பேட்டி: 'பாணன்'



# 'தலைக்கோ ஸாரநாதன்'

## 11. தீர்க்க தரிசனப் பாறை

தற்கொலை முனையை நோக்கித் தின கரன் சென்று கொண்டிருந்தபோது, ஏற்கெனவே பல சந்தர்ப்பங்களில் வனஜாவிடம், ''செத்துத் தொலைக் கிறேன்'' என்று தான் சொல்லியிருப் பது அவன் நினைவுக்கு வந்தது. அவ ளுடைய கேவலமான நடத்தையைச் சகிக்க முடியாமல் அவன் இவ்வாறு கூறிய ஒரு சமயத்தில் அவள் கிண்ட லாகச் சொன்ன பதில் இதுதான்: ''செய்யுங்கள்; ஆனால் ஞாபகமாக 'நான் தற்கொலை செய்து கொள் கிறேன்' என்பதாக ஒரு காகிதத்தில் எழுதிப் பாக்கெட்டில் வைத்துக் கொள் ளுங்கள். போலீஸார் கொலை என்று தவறுதலாக நினைத்து விடப் போகி றார்கள்.''

'ஆமாம். அதிலும் உண்மை இருக் கத்தான் செய்கிறது' என்று எண்ணி னான் தினகரன். 'நாம் இறந்து போன பிறகு அனாவசியமான குழப்பங்களுக்கு இடம் தருவானேன்?'

கால்ஃப் கிளப் அருகே சாலையில் அமைந்திருந்த ஒரு சிறிய பாலத்தின் மதின் மீது அமர்ந்தான். சூரிய ஒளி குளிருக்கு இதமாக அவனை அணைத்தது. அந்த இனிமையை அனுபவிக்கும் மன நிலையா அவனுக்கு? பையிலிருந்து டைரியை எடுத்து ஒரு தாளைக் கிழித் தான். அதில் தான் தற்கொலை செய்து கொள்வதாயும் தன் மரணத்துக்கு யார் மீதும் சந்தேகப்பட வேண்டாம் என் றும் பால் பாயிண்ட் பேனாவால் எழுதிச் சட்டைப் பையில் வைத்துக் கொண் டான். பின்னர் தற்கொலை முனையை நோக்கி நடந்தான்.

கால்ஃப் கட்டடத்தின் முன்னால் அழ கிய பசும் புல் தரை மைதானம். பக்க வாட்டில் வேலி எடுத்து ஸூயிஸைட் பாயிண்டுக்குப் போகக் குறுகலான பாதை ஏற்படுத்தியிருந்தார்கள். அதன் மீதாக நடந்தான் தினகரன். அம்முனையை அடைந்த பிறகு சுற்று லாப் பயணிகளுக்குப் பாதுகாப்புத் தர அங்கு பலமான ஏற்பாடு செய்யப் பட்டிருப்பதைப் பார்த்தான். யாரே னும் தவறிப் போய் அந்தக் கிடுகிடு பள் ளத்தில் விழுந்து விடக் கூடாதே என் பதற்காக உயரமான மதின் சுவர் எழுப்பி அதன் மேல் முள் வேலிக் கம்பி யும் போட்டிருந்தார்கள். தொலைவில் கால்ஃப் கிளப் சிப்பந்திகள் ஒரு 'லான் மூவர்' இயந்திரத்தின் உதவியுடன் புல் வெட்டும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். 'இந்தச் சுவர்மீது தான் ஏறினாலோ வேலியைத் தாண்டிக் குதித்தாலோ அவர்கள் கவனிக்கப் போவதில்லை. அப்படியே அவர்கள் பார்வையில் தான் பட்டு விட்டாலும் தன்னைத் தடுக்க அவர்கள் ஓடி வருவதற்குள் அப்பால் பாய்ந்து விடலாம். ஐயாயிரம் அடியோ அல்லது ஆறாயிரம் அடியோ தன் உடல் விர்ரென்று கீழ் நோக்கி விழும். நமது வேகம் என்னவாக இருக்கும்? புவி ஈர்ப்பு சக்தி பற்றிக் கல்லூரியில் படித் தது மறந்தே போயிற்று...தலை ஏதோ ஒரு பாறையைத் தாக்கிப் பிளவுபடும்

கி.ராஜேந்திரன்



போது வினாடி நேரம் வேதனை 'சுரீல்' என்று உடல் முழுதும் பாயும். ஒரே ஒரு விநாடிதான்! அப்புறம் இந்தப் பள்ளத்தாக்கில் நிலவும் பூரண அமைதியைத் நானும் அடைந்து விடலாம்! நாம் சமாதி அடையப் போகும் இடத்தை முதலில் நன்றாக ஒரு தடவை பார்த்துக் கொள்ளலாம்...'

மாட்சிமை என்ற சொல்லைப் பல சந்தர்ப்பங்களில் பலர் கூறக் கேட்டிருக்கிறான் தினகரன். ஆனால் மாட்சிமை என்பதன் பொருளை முழுமையாக உணர இந்த இடத்துக்குத்தான் வரவேண்டும் என்று இப்போது அவனுக்குத் தோன்றியது. வானளாவ உயர்ந்த மலைகள் மாட்சிமையோடு விளங்கின. அதன் உச்சியிலிருந்து பாதாளம் நோக்கிப் பாய்ந்த சரிவிலே மாட்சிமை துலங்கியது. மலைகளை மருவ வந்த மேகக் கூட்டங்களின் மாட்சிமை தெற்றெனத் தெரிந்தது. மலைகளின் பக்கங்களைக் கவ்விக் கொண்டு வளர்ந்துவிட்ட அடர்ந்த கானகங்களின் மாட்சிமை காணக் கிடந்தது. இத்தனையையும் உள்ளடக்கிய வானக் கூரையின் மாட்சிமையும் நன்கு உணரத் தக்கதாய் இருந்தது.

திரும்பிய திக்கிலெல்லாம் அவன் மாட்சிமையை, மகோன்னதத்தை, மாண்பினைக் கண்டான். அந்தக் கண் கொள்ளாக் காட்சிகளினிடையே அவனுடைய பிரச்னைகள் அற்பத்தனமானவையாகப் பட்டன.

'மனிதனின் பிரச்னைகள் மட்டுமென்ன, மனிதனின் சாதனைகளும் அற்ப சொற்பம்தான். இதைச் செய்தேன், அதை வென்றேன் என்று மார் தட்டுகிறானே; — இந்நாள் வரை மனிதன் சாதித்துள்ளவை எல்லாவற்றையும் ஒன்று சேரப் பார்த்தால் கூட அவை இதோ என் கண்ணெதிரே தோன்றும் ஆண்டவனின் இந்தப் படைப்புக்கு ஈடாகா! எத்தனை அழகு, எவ்வளவு பெரிய கலைஞன்!



'ஆண்டவனுக்கும் ஓர் ஆசை! தனது கலைத் திறனால் உருவானவற்றைத் தான் மட்டும் பார்த்து ரசித்தால் போதாது. வேறு பலரும் அவற்றைக் கண்டு ஆனந்திப்பதைத் தான் பார்த்து மன நிறைவு பெற வேண்டும்! இதற்காகத்தானோ என்னவோ அவன் மனிதனைப் படைத்தான், அவனுக்குக் கலையுள்ளத்தையும் கொடுத்தான்! இறைவனுடைய சிருஷ்டி எழிலெல்லாம் தான் அனுபவிக்கக் காத்திருக்கும்போது அவற்றை விட்டு விட்டு வனஜாவுடையது போன்ற ஒரு விகாரமான மனத்தை நினைத்துத் தான் துன்பப்பட்டுக் கொண்டிருப்பதில் என்ன பயன்? அந்த வனஜாவும் கடவுள் என்ற அதே கலைஞனால் உருவாக்கப்பட்டவள்தானே என்றால், ஓவியன் தூரிகையை உதறியபோது தவறுதலாகப் பட்டுவிட்ட கரிய மை என்றோ, சிற்பி செதுக்கியபோது எதிர்பாராத விதமாக மூளியாகி விட்ட சிலை என்றோ அவளை நினைத்து ஒதுக்கி விட்டுப் போக வேண்டியது தான். குப்பையில் எறிய வேண்டிய படத்தை என் மனத்தில் அன்பெனும் சட்டம் போட்டு மாட்டிக் கொண்டது என் தவறு.

'வனஜா எக்கேடாவது கெட்டுப் போகட்டும். எனக்கு ஆண்டவன் சிருஷ்டித்த இந்த உலகமே இருக்கும்போது அவளுக்காக நான் ஏன் புனிதமான என் உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டும்? அத்தனை பெரிய தியாகத்தை என்னிடம் எதிர்பார்க்க அவளுக்குத் தகுதி ஏது?'

எந்த இடத்தில் சமாதி அடைந்து சாந்தி பெற விரும்பினானோ, அந்த இடம் அவனை ஏற்காமலேயே அவனுக்குச் சாந்தி கிட்ட வழி வகுத்து விட்டது! தற்கொலைச் சீட்டைப் பையிலிருந்து எடுத்துச் சுக்குநூறாகக் கிழித்தான் தினகரன். ஸூயிஸைட் பாயிண்டிலிருந்து தாள்களைப் பறக்க விட்டான். அவை மெல்ல அசைந்தாடி மிதந்து அடிவாரம் நோக்கி இறங்கத் தொடங்கின.

வந்த வழியாகவே திரும்பி நடந்து பிரதான சாலையை அடைந்தான். அதே சமயம் டூரிஸ்ட் பஸ் ஹாரனைப் பலமாக முழக்கிப் பயணிகளின் உற்சாகத்தைப் பிரதிபலித்தவாறு வருவது தெரிந்தது. 'ஆகா! 'பிக்னிக்' முடிந்து தற்கொலை முனையைப் பார்க்க வந்து விட்டார்கள். அந்தச் சனியன் வனஜாவின் கண்களில் நான் தட்டுப்படவே கூடாது!'

பரபரப்புடன் அக்கம் பக்கத்தில் பார்த்தான் தினகரன். 'ஹில்டாப் ரோட்' என்று ஓர் அறிவிப்புப் பலகை தென்பட்டது. விடுவிடுவென்று அந்தப் பாதை வழியே ஏறத் தொடங்கினான். 'ஒரு மாபெரும் மலைத் தொடரின் இடையில் ஒரு மலைமீது அமைந்துள்ள



கோடை வாசஸ்தலத்துக்கு நாம் வந்திருக்கும்போது அதன் மத்தியில் ஒரு குன்றையும் அந்தக் குன்றை அடைய ஒரு பாதையையும் அல்லவா காண்கிறோம்? — ஒட்டகத்தின் முதுகு வீங்கிக் கொண்ட மாதிரி இது என்ன வேடிக்கை!' பாதையில் ஏறிச் செல்லும்போதே இப்படி ஓர் எண்ணம் ஏற்படப் புன்னகையுடன் நடையைத் தொடர்ந்தான்.

குன்றின் உச்சியில் விசாலமான ஒரு பாறை. சுமார் முப்பது பேர் நெருக்கி அடித்து உட்கார்ந்து கொண்டு கதை கேட்கலாம்—அத்தனை அகன்றது. ஏறத்தாழ சமதரையும்கூட. அங்கு இப்போது ஈ காக்காய் இல்லை. அதன் சுற்று வட்டாரத்தில் ஒரு பக்கம் புதர்களும் மரங்களும் மண்டிக் கிடந்தன. இன்னொரு புறம் பிளம் மரங்களும் பேரிக்காய் மரங்களும் செழித்து வளர்ந்திருந்தன. பழுத்துச் சிவந்த பிளம் பழங்களும் பம்மிப் பருத்த பேரிக்காய்களும் கொய்து சுவைக்கப்படக் காத்திருந்தன.

இவை இல்லாத இன்னொரு திக்கில் சற்றுப் பார்வையைச் செலுத்தினால்... அடேயப்பா! அந்தக் காட்சி ஏற்படுத்தும் உணர்ச்சிகளின் விளைவாக நாம் வாயடைத்தல்லவா போய் விடுகிறோம்! பிறகு அதை வர்ணிப்பது எப்படி?

இப்படி நாம் திகைத்துத் திணறுவோம் என்பதால் நமக்கு உதவவே போல் அந்தப் பாறைக்கு ஒரு பெயர் சூட்டி அந்தப் பெயரை ஒரு பலகையில் எழுதி ஒரு மரத்தில் ஆணி அடித்துப் பொருத்தியு மிருக்கிறார்கள்: ''ராக் ஆஃப் விஷன்'' — தீர்க்க தரிசனம் தரும் பாறை!

அந்தப் பாறையின் மையத்தில் போய் அமர்ந்து அந்தக் காட்சியைப் பார்த்தான் தினகரன். 'ஆண்டவனைக் கோயிலில் போய்த் தேடுவதை விட இந்த மாதிரி ஓரிடத்தில் அவனைச் சுலபமாகக் கண்டுபிடித்து விடலாம், அவனுடன் ஐக்கியமடைந்தும் விடலாம்' என்று அவனுக்குத் தோன்றியது. நல்ல வேளையாகப் பாதுகாப்புக்காகச் சுவரோ, முள் வேலியோ எதையும் எழுப்பி இயற்கையைக் களங்கப்படுத்தவில்லை அங்கே. அடடா! சிறுவன் ஒருவன் கடற்கரையின் ஈர மணலில் குன்றுகளைச் சமைப்பது போலல்லவா இறைவன் இங்கே அலட்சியமாக மலைகளைப் பிடித்து வைத்திருக்கிறான்! மனிதன் மீதுள்ள கருணையால் அவன் உச்சவரம்புச் சட்டம் எதற்கும் தன்னை உட்படுத்திக் கொள்ளாமல் லட்சோப லட்சம் ஏக்கர்களில் வனங்களைப் பயிர் செய்தும் வைத்திருந்தான். இந்தச் சிகரங்களை விட உயர்ந்தவன்; இம்மலைகளைப் போல் நிலையானவன், மெய்யானவன்; இவ்வனங்களைப் போல் உள்ளத்தில் என்றும் பசுமையானவன் என்பதை மானிடனுக்கு உணர்த்தத்தான் இந்த அற்புதங்களைச் சிருஷ்டித்தானோ? இறைவனை சர்வ வியாபி என்று இந்த இடத்தில் வைத்து அழைக்கும்போதுதான், அந்தக் காரணப் பெயர் அர்த்தபுஷ்டியுடன் தொனிக்கிறது. ஏனெனில் உலகம், அண்டம், பேரண்டம் அனைத்தையும் கடந்து நின்று, அனைத்தையும் ஒரு நியதிக்குள் அடக்குகின்ற அந்த சர்வ வியாபியின் திருச்சபையில் அமர்ந்திருக்கும் ஆனந்த அனுபவத்தை, உலகின் ஒரு சிறு பகுதியான இந்த மலைகளைப் பார்க்கும்போதே எவ்வாறோ அடைந்து விடுகிறோம். ராக் ஆஃப் விஷன்! — பொருத்தமான பெயர்தான்!

பின்னால் சாலடிச் சத்தம் கேட்டது. சில கூழாங்கற்கள் உருண்டன. யாரோ வெகு வேகமாக ஏறி வருகிறார்கள். இலேசான சிரிப்பொலியும் கேட்கிறது.

பாவம், தினகரன்! அவன் ஒரு விவேகானந்தராகவோ அல்லது வேறு ஒரு யோகியாகவோ மாறிவிடும் மனப் பக்குவத்தை இன்னும் பெறவில்லையே! சுவாமியைப் பற்றி எண்ணினாலும் சமாதி நிலையை அடைந்து விடவில்லையே! ஆகவே திரும்பிப் பார்த்தான். ஓ, சற்றுத் தொலைவில்... 'வனஜாவும் அவள் காதலனும்...(சீ! காதலன் என்ற அழகான வார்த்தையை இவனுக்குப் பயன்படுத்தி அதை அழுக்காக்குவானேன்?)... அவள் ஆசைநாயகன் மருதாசலமும் அல்லவா வருகிறார்கள்! அதோ அந்தத் திருப்பத்தைக் கடந்தால் அவர்கள் என்னைப் பார்த்துவிட முடியும். இந்தப் பீடைகளிடமிருந்து தப்பலாம் என்று பார்த்தால் மறுபடியும் என் எதிரிலேயே வந்து நிற்கின்றனவே! எங்கேயாவது நான் ஒளிந்து கொள்ளத்தான் வேண்டும். அந்தப் பேரிக்காய் மரத்துக்குப் பின்னால் பதுங்கினால் என்ன?'

தினகரன் அவ்வாறே செய்தான்.

'சுற்றுலாக் கூட்டத்திலிருந்து இவர்கள் பிரிந்து அவசரம் அவசரமாய் முன்னால் வந்திருக்கிறார்கள். அப்படி முந்திக் கொண்டு முன்னேறி வந்தது தனிமையை அனுபவிக்கவா? அல்லது தனிமையில் அனுபவிக்கவா? ஐயோ! அந்தக் கண்ணராவிக் காட்சியை இந்தக் கண்களால் பார்க்க வேண்டுமா? தேவையில்லை! நன்றாக என்னை இங்கு மறைத்துக் கொண்டு, கண்களையும் மூடிக் கொண்டு விடுகிறேன்...'

பரிதாபம்! தினகரன் அண்ட பேரண்டத்தையும் அவை அனைத்தையும் கடந்து நின்றவனையும் சற்று முன்புதான் நினைத்துப் பார்த்தான். என்றாலும் கூட இன்னமும் அவன் அளப்பரிய ஆசாபாசங்களைக் கொண்ட மனிதனாகத்தான் இருந்தான். ஆகவே 'கண்களை மூடிக் கொண்டு விடுகிறேன்' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாலும் நடப்பதை விழி பிதுங்கப் பார்க்கவே செய்தான். மரத்தின் மறைவில் தன்னை மறைத்துக் கொள்ளத் தீர்மானித்திருந்தாலும் எட்டிப் பார்க்க அவன் தவறவில்லை.

அந்நிலையில் அவன் கண்டது அவன் உடலையெல்லாம் தகிக்கச் செய்தது.

மற்றவர்களுக்கு முன்னதாக உச்சியை அடைய வேண்டும் என்று விரைந்தோடி வந்ததால் அவ்விருவருக்கும் இன்னும் இரைத்துக் கொண்டிருந்தது.

''இன்னும் இரண்டு நிமிஷங்களில் மந்தையாக வந்து நிற்பார்கள், சீக்கிரம்!'' என்று கூறிச் சிரித்தான் மருதாசலம். விம்மி விழும் நெஞ்சம் வனஜாவுக்கு இன்னும் அடங்கவில்லை. சிரிக்க முடியாமல் சிரித்தபடி அவனுடைய கை வளையத்துக்குள் கட்டுப்பட்டாள். இருவரது சிரிப்புமே விரைவில் நின்று விட்டது. அதரங்களுக்கு வேறு வேலை இருந்ததால்.

தினகரனுக்குத் தெரியாத புதிய விஷயம் ஏதும் இல்லை. ஆனால் துரதிர்ஷ்டவசமாக இன்று அவன் பார்க்கும்படியாக அவன் கண்ணெதிரேயே இப்படி நடந்து விட்டது. அவன் உடல் முறுக்கேறி விடைத்துக் கொண்டது.

'இங்கு வந்ததும் இறைவனைப் பற்றி என்னவெல்லாம் உயர்ந்த எண்ணங்கள் என் உள்ளத்தில் எழுந்தன? அவ்வளவு தோன்றாது போனாலும் இந்த அதியற்புதமான இயற்கைக் காட்சிகூடவா கவனத்தைக் கவராமல் போய்விடும்? உடல் வேட்கைக்குத் தீனி போடுவது ஒன்றுதான் காரியமா? உலகில் மனிதனாகப் பிறந்தது அதற்காக மட்டும் தானா? இங்கு வந்து வந்தனைக்குரிய இந்தத் திருச்சபையைக் களங்கப்படுத்தி விட்டார்களே!' கோபம் உள்ளத்தில் அக்கினியாக மூண்டெழக் கண்கள் தணலாகிச் சிவந்தன.

'இந்தத் தெருவோர நாய்களை, குப்பைமேட்டுப் பன்றிகளை இப்படியே விட்டு வைக்கக் கூடாது. ஒரு பாய்ச்சல், கரங்களின் ஒரு வீச்சு — அவ்வளவுதான் அகல பாதாளத்தில் அலறிக் கொண்டு விழுவார்கள், சாவார்கள். உலகம் பெருமளவுக்குத் தூய்மைப்படும்; ஆனால் நரகம்கூட இவர்களை வரவேற்க வெட்கப்படும்!'

தினகரன் மரத்தின் மறைவிலிருந்து வெளிப்பட்டு ஓடிச் சாடினான். 'டிராகுலா'வைச் சந்தித்து விட்டதுபோல் அவர்கள் இவனைப் பார்த்தது தினகரனுக்குத் தெரிந்தது. அப்புறம் எல்லாம் கலங்கலாகியதுடன் மங்கவும் செய்தன; மறைந்தும் போயின!



## 12. 'ராஜாவுக்கு ஆபத்து!'

ஏரியில் படகிலே உல்லாசமாகச் சுற்றி விட்டுத் திரும்பிவந்த பத்மநாபன் குடும்பம் ஹோட்டல் அறையில் சற்று நேரம் சீட்டாடிவிட்டுச் சாப்பாட்டுக்குக் கிளம்பியது. குளிரை எதிர்த்துப் போராடவும் இருளைத் தாக்கி வீழ்த்தவும் ஸ்வெட்டர் முதலான பலமான பாதுகாப்புக் கவசங்களுடனும் டார்ச் லைட் ஆயுதத்துடனும் புறப்பட்டது.

சாப்பாட்டுக் கூடத்தை நோக்கிப் போகும் வழியில், ரங்கன் தன் அறைக்கு வெளியே வராந்தாவில் கிடந்த ஒரு நாற்காலியில் 'சிவனே' என்று உட்கார்ந்திருப்பதானது சாத்தியிருந்த கண்ணாடி ஜன்னல் கதவுகள் வழியே தெரிந்தது. தனியே அவன் பொழுது போகாமல் அமர்ந்திருப்பதைப் பார்க்கப் பத்மநாபனுக்குப் பாவமாய் இருந்தது.

''அப்பா கடமையாற்றப் போய் விட்டார்; மகன் கில்லிங் டைம்'' என்றாள் மீனா, அவருடைய பரிவைக் கூட்டும் விதத்தில்.

பத்மநாபன் படியேறினார். வாசல் கதவு திறந்ததும், ''என்ன, சாப்பிடப் போகலையா?'' என்றார்.

''இல்லை, அப்பா வரட்டுமே என்று காத்திருக்கிறேன்.''

''அவர் எப்போ வருவாரோ? போன காரியம் முடிஞ்சதானே திரும்பணும்? நீ வா; நாம் சாப்பிடப் போவோம். அப்பாவிடம் நான் சொல்லிக்கறேன்.''

''சரி'' என்று கிளம்பினான் ரங்கன். உற்சாகத்தை மறைத்துக் கொள்ள அவன் முயலவில்லை.

''ஸ்வெட்டர், ஸ்வெட்டர்!'' என்று கரிசனத்துடன் ஞாபகப்படுத்தினாள் மீனு.

சற்று நேரத்தில் சப்பாத்தியும் வாகுவும் ஆவி பறக்கும் நிலையிலேயே இதமாக வயிற்றுக்குள் இறங்கிக் கொண்டிருந்தன அனைவருக்கும்.

''மீனு! நடராஜன் ஸாருக்குச் சாப்பாடு எடுத்து வைக்கச் சொல்லிவிட்டுப் போகணும். ஞாபகம் வைச்சுக்கோ'' என்றார் பத்மநாபன். பிறகு ரங்கநாதன் பக்கம் திரும்பி, ''இப்படி அவர் அடிக்கடி ஏதாவது ஜோலியா கிளம்பிடறார்னு உங்களுக்கு நேரத்தை ஓட்டறது கஷ்டமாகத்தான் இருக்கும்'' என்றார் அனுதாபத்தோடு.

''இவரோடு கிளம்பி வந்ததே தப்போன்னு தோணும் சில சமயம். கோபம் கோபமாக வரும். ஆனால் அவர் திரும்பி வந்த உடனேயே எல்லா மனத்தாபமும் பறந்து விடும். இங்கேயாவது ஓரளவுக்கேனும் அவருடன் இருக்க முடிகிறதே. சென்னையில் ஒரே வீட்டில் அவர் யாரோ நான் யாரோ என்பது போலத்தான் இருப்போம்.''

''அப்படி இருந்தாலும் அப்பாவும் பிள்ளையும் பாசத்துடன் ஒட்டுதலாயிருக்கேளே!''

''ஸார்! நினைவறிந்து நான் என் தாயாரைப் பார்த்ததில்லை. தாய், தந்தை, நண்பர் எல்லாம் எனக்கு அவர்தான். ஒவ்வொரு நாளும் பத்து நிமிஷங்கள்தான் என்னுடன் செலவிட முடியுமென்றாலும் அந்தப் பத்து நிமிஷங்களை முழுமையாக எனக்கே தந்து விடுவார். ஏக்கத்தைத் துடைத்து நெஞ்சமெல்லாம் இனிக்கச் செய்து விடுவார்.''

''நான் பம்பாயில் ஒரு பிரமுகரைப் பேட்டி காணச் சென்றிருந்தபோது, இடையில் அவருக்கு ஒரு ஃபோன் வந்தது. 'நாலரை மணிக்கு வா, அப்போதான் கொஞ்சம் ஃப்ரீயா இருப்பேன்' என்று இவர் ஃபோனில் சொன்னார். பின்னர் ஃபோனை வைத்துவிட்டு என்னைப் பார்த்து, 'என் மகன்; ஏதோ காரியமா என்னைச் சந்திக்கணுமாம்' என்றார். எப்படி இருக்கிறது கதை? அப்பாவைப் பார்க்கப் பிள்ளை அப்பாயிண்ட்மெண்ட் ஃபிக்ஸ் பண்ணிக் கொள்ளணும்!''

சிரிப்பு அடங்கிய பிறகு ரங்கன் சொன்னான்: ''எங்கள் நிலைமை அவ்வளவு மோசமில்லை. என்றாலும் இங்கே விடுமுறைக்கென்று வந்த பிறகும் அவருடன் அதிக நேரம் உறவாட முடியாதது ஏமாற்றமாகத்தான் இருக்கிறது.''

''சொல்லி விடுகிறதுதானே இவர்: 'நான் லீவில் இருக்கேன் சுவாமி! என்னைத் தொந்தரவு பண்ணாதே'ன்னு?''

''நோ நோ! அது அவருக்குப் பிடிக்கவே பிடிக்காது. டியூட்டி என்று வந்து விட்டால், யூனிஃபாரம் அணிந்த ஒருவர் உதவி என்று கேட்டு விட்டால், அதை அவர் இடையூறாகவே நினைக்க மாட்டார். சொந்த விருப்பு வெறுப்புகளுக்கு அதில் இடமே இல்லை. எனக்கும் அவரது இந்தப் போக்கு பழகிப் போய் விட்டது.''

''பரவாயில்லை. உங்களுக்குப் பேச்சுத் துணைக்கு நாங்கள் இருக்கிறோமே, உற்சாகமா இருங்கள்'' என்றாள் அம்புஜம்.

''ரொம்ப தாங்க்ஸ் அம்மா!'' என்றான் ரங்கன். ''உங்களை அம்மா என்று நான் கூப்பிடுவதில் உங்களுக்கு ஆட்சேபனை இல்லையே?''

''தாராளமாகக் கூப்பிடு, ரங்கா!'' என்றாள் அம்புஜம் பெருமிதத்துடன்.

''அம்மா! இவர் வயசிலே உனக்குப் பிள்ளை இருக்கணும்னா உனக்கு இன்னும் இரண்டு வயசு கூடிடும்; ஞாபகம் இருக்கட்டும்'' என்றாள் மீனு.

''ரங்கன் மாதிரி எனக்கு ஒரு பிள்ளை இருந்தான்னு சொன்னால் நான் இப்பவே தொண்டு கிழவியாகிவிடத் தயார்'' என்றாள் அம்புஜம்.

''நான் இதை மறக்கவே மாட்டேன், அம்மா'' என்ற ரங்கனுக்குக் கண்ணீர் ததும்பி விட்டது. கர்சிப்பை எடுத்து இல்லாத வியர்வையைத் துடைத்துக் கொள்வது போல் பாசாங்கு காட்டிக் கண்ணீரை ஒற்றினான். அவன் நடிப்பு யாரையும் ஏமாற்றவில்லை.

அன்றைக்கு அவர்கள் இரும்பிச் சற்று நேரத்தில் வாசல் கதவு தட்டப்பட்டது. ''செஸ் ஆடத் தெரியுமா ஸார்?'' என்று கேட்டுக் கொண்டே ரங்கன் உள்ளே நுழைந்தான். தன் கையில் பர்ஸ் போல வைத்திருந்த ஒரு பையின் 'ஜிப்'பைப் பிடித்து இழுத்தான். அது புத்தகம் போல் பிரிந்தது. உள்ளே செஸ் போர்டும் காய்களும் சிறிய அளவில் இருந்தன.

''இந்த வருஷம் என் பிறந்த நாளுக்கு அப்பா வாங்கிக் கொடுத்தது'' என்றான் ரங்கன். தந்தத்தாலும் ரோஸ்வுட்டினாலும் ஆன செஸ் போர்டு —

“இது க்ராய்லின் வண்ணப் பூச்சா என்ன?”

“ஓ! அதுவும் நானே தீட்டியதாகும்”

**இலவசம்!**

சட்டு க்ராய்லின் வண்ணப் பாட்டில்கள் கொண்ட ஏதேனும் பாக்கெட் வாங்கினால் ஒரு புது மாடல் ப்ளாஸ்டிக் ப்ரஷ் மற்றும் டிசைன்கள் இலவசம்.

## கற்றிடுவீர்—க்ராய்லின் பெயிண்டிங்

இன்றே எமது தபால்வழி பயிற்சியில சேருவீர்

கேமல் க்ராய்லின் தயாரிப்பாளர்கள் உருவாக்கித் தந்திடும் ஒப்பற்ற வாய்ப்பு. ஓய்வு நேரத்தில் உங்கள் வீட்டில் இருந்தபடியே துணிகளில் வண்ணம் தீட்டும் கலையைக் கற்றுக் கொள்ளுங்கள். வண்ணம் தீட்டும் நுட்பத்தில் தேர்ச்சிபெற வகை செய்யும் ரூ. 12 மதிப்புள்ள வண்ணப் புத்தகம் உங்களுக்கு இலவசமாக கிடைக்கிறது. இத்தனைக்கும் ரூ.20 மட்டுமே!



பிரபல ஓவியரும் எங்கள் துகில் ஆர்ட் டாய்ரக்டர் திரு. பால் வாட் அவர்களின் நேரடிப் பயிற்சியும் கவனிப்பும் கிடைக்கிறது.

தொடர்பு கொள்க:
க்ராய்லின் கரஸ்பாண்டன்ஸ் ஸ்கூல்




camel Cryllin® COLOURS



VISION 721 TM

காய்கள் என்றும் பர்ஸ் போன்ற மேலுறை உயர்ரகத் தோலினால் ஆனது என்றும் பத்மநாபன் கவனித்தார்.

''மீனுதான் சுமாராக ஆடுவான்'' என்ற பத்மநாபன் மகளைப் பெயர் சொல்லி அழைத்தார். அடுத்த கணம், ''செஸ்தானே இதுவரையில் என்னை யாரும் தோற்கடித்ததில்லை'' என்று சொல்லிக் கொண்டே உள் அறையை மறைத்த திரையைத் தள்ளிக் கொண்டு வந்து அமர்ந்தான் மீனு. வெளியே ரங்கன் குரல் கேட்டதுமே உள்ளே அவன் அவனைச் சந்திக்கத் தயாராகி விட்டிருந்தான் என்பது பத்மநாபனுக் குப் புரியாமல் போகவில்லை.

அவர் குளிரை வெளியே தள்ளிக் கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டு வந்து வோட்ஹவுஸின் நகைச்சுவையில் ஆழ்ந் தார். புத்தகம் படிக்கையில் தம்மை மறந்து அவர் சிரித்தபோது 'எதற்குச் சிரிக்கிறீர்கள்?' என்று கேட்க ஆள் இல்லை. உள்ளே விகலைத் தூங்கப் பண்ண முயன்ற அம்புஜத்தை அவன் தூங்கப் பண்ணி விட்டு அவளுடைய தாலிச் சரட்டுடன் விளையாடிக்கொண் டிருந்தான். அனசூயா கண்ணயர்ந்து பத்து நிமிஷங்களுக்கு மேலாகிவிட்டது. மீனுவும் ரங்கனும் இந்த உலகிலேயே இல்லை!

வாசல் கதவின் உடைந்த கண்ணாடி வழியே சில்லென்று காற்று புகுந்தபோது முகத்தைச் சுளித்துக் கொண்டு பத்மநாபன் நிமிர்ந்தார். அப்போது செஸ் ஆட்டம் ரொம்ப ரொம்ப நிதானமாகவே முன்னேறு வதைக் கவனித்தார். ஒவ்வொரு நடவையும் அவர்கள் காயை நகர்த்து வதற்கு முன்னால் ஒன்றிடம் ஒன்று சிறைப்பட்ட கண்கள் விடுதலைக்குப் போராட வேண்டியிருந்தது; எங் கெங்கோ உல்லாசமாகத் திரிந்து கொண் டிருந்த மனங்களைக் காதைப் பிடித்துத் திருகி இழுத்து வரவேண்டியிருந்தது! இந்த லட்சணத்தில் ஆட்டம் முடிவது எப்போது?

பத்மநாபன் பெரிதாக ஒரு கொட் டாவி விட்டார், அவர்களுக்குக் கேட்கு மாறு.

மீனு புரிந்து கொண்டாள். நன்றாகக் கவனித்துப் பார்த்து ஒரு காயை நகர்த்திவிட்டு,''ராஜாவுக்கு ஆபத்து!'' என்றான்.

''இந்த ராணியால் தாக்கப்படத் தானே காத்திருந்தான் ராஜா!'' என்று சொல்லிவிட்டு செஸ் பலகையை மடக்கி, ஜிப்பை இழுத்து மூடிக் கொண்டே எழுந்தான் ரங்கன், தன் அறைக்குத் திரும்ப. (தொடரும்)

## தெரிந்த விளையாட்டு: தெரியாத விவரம்

### 4. டென்னிஸ்

- விம்பிள்டன் மத்திய மைதானத்தில் பெவிலியனின் இந்த வாசகம் காணப்படுகிறது: 'வெற்றியோ தோல்வியோ இரண்டையும் நீங்கள் சமமாகப் பாவிக்க வேண்டும்!'

- டென்னிஸ் என்ற வார்த்தை 'பென்னிஸ்' (Phennis) என்ற கிரேக்க வார்த்தையிலிருந்தோ 'டின்ஸ்' என்ற ஜெர்மன்மொழியிலிருந்தோ பிறந்திருக்கலாம். இச்சொற்கள் பந்து குதிப்பதைத் தெரிவிக்கின்றன. டென்னிஸால் பிரான்ஸில் ஷாம்பேன் ஜில்லாவில் முதன் முதலில் பந்து தோன்றிய இடம். 'லவ்' என்ற பிரஞ்சு வார்த்தைக்கு 'முட்டை' என்று அர்த்தம்!

- காண்டர்பரியில் தன் வீட்டில் டென்னிஸ் ஆட அனுமதித்ததற்காக 1396ம் ஆண்டில் தண்டனை பெற்றவனும் உண்டு. நெப்போலியன் டென்னிஸ் ஆடுவதைத் தன் பொழுதுபோக்காகக் கொண்டான். - குண்டுமணி



படம்: டேவிஸ் கப் போட்டியில் கலந்துகொண்ட பிரிட்டிஷ் ஆட்டக்காரர் ரோஜரும் ஸ்டில்வெல் 'பறந்து' சென்று பந்தைத் தாக்குகிறார்!

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல.

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோனைஸ் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.

A.G.45.TH

நிகோலஸ் தயாரிப்பு



நான் பலராமனின் வீட்டுக்குள் நுழைந்தபோது ஒரே அமர்க்களமாக இருந்தது. பலராமன் உச்ச ஸ்தாயியில் ஏதோ அலறிக் கொண்டிருந்தான். அவனுக்குச் சற்றும் சளைக்காதவளாக அவன் மனைவி சரோஜா அதே ஸ்தாயியில் பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். அவர்களது ஒரே பிள்ளை முரளிக் கண்ணன் அப்பா — அம்மா போடும் சண்டையை ரசித்த படி மாடிப் படியில் பரம சாதுவாக உட்கார்ந்திருந்தான்.

நான் போனதும் பலராமனும் சரோஜாவும் சட்டென்று ஓய்ந்து விட்டார்கள். என் ராசி அப்படி. நான் எங்கேயாவது சண்டை அல்லது ஆக்ஸிடெண்ட் என்று தெரிந்து கொண்டு ஓடினேனானால், நான் போய்ச் சேர்ந்தவுடன் சண்டை சப்பென்று முடிந்துவிடும். அல்லது ஆக்ஸிடெண்ட் சம்பந்தப்பட்டவர்களை அப்புறப்படுத்தி யிருப்பார்கள். எனக்குக் கோபிப்பதற்கு எதுவுமே கிடைக்காது.

ஆனால் இன்றைக்கு அப்படி விட்டுவிட விருப்பமில்லை எனக்கு. எனவே, "என்ன பலராமா! என்ன தகராறு இங்கே?" என்று மெள்ளத் தூண்டில் போட்டேன்.

"ஒன்னுமில்லேப்பா..." என்றான் அவன் விரக்தியாக.

"பரவாயில்லே சொல்லு. நாம ரெண்டு பேரும் எவ்வளவு ஆப்தமான நண்பர்கள்! என்கிட்டே சொன்னால் என்ன? என்ன விஷயம் என்று தெரிந்தால் நானும் கொஞ்சம் உதவி பண்ணுவேனில்லையா?" என்று தூண்டிலில் ஒரு புழுவைச் செருகி மீண்டும் போட்டேன்.

"எல்லாம் இவளாலே வந்தது!" என்று சமையலறைக் கதவருகில் நின்று கொண்டிருந்த சரோஜாவைச் சுட்டிக் காட்டினான் ஆத்திரத்துடன்.

"அதை மட்டும் சொல்லாதீர்கள்... எல்லாம் உங்களாலே தான்!" என்று அங்கிருந்தவாறே அம்பு வீசினாள் சரோஜா.

"இல்லே, இல்லே, இல்லே! உன்னாலேதான்! ஆயிரம் தடவை சொல்வேன்!"

"இல்லே, இல்லே, இல்லே! உங்களாலேதான்! நான் லட்சம் தரம் சொல்வேன்!"

# ஹும், யாருக்கு வேண்டும்?

"நீ, என்றைக்கு உன் தப்பை ஏற்றுக் கொண்டாய்? மாட்டாயே! உன் பரம்பரையே அப்படி ஆச்சே!"

"நீங்க மட்டும் மனுநீதிச் சோழன் பரம்பரையாக்கும்!"

என்பாடு தர்மசங்கடமாகப் போய் விட்டது. இவர்கள் இருவரும் இப்படிப் பரம்பரைச் சண்டையில் இறங்கி விட்டார்களென்றால், அப்புறம் இப்போதைய சண்டை பற்றிய முழு விவரங்களும் எனக்குக் கிடைக்காமல் போய்விடுமே! எனவே, "உஸ்! இதென்ன சண்டை, சின்னக் குழந்தை மாதிரி!" என்று கையமர்த்தி விட்டு, "பலராமா, நீ விஷயத்துக்கு வா!" என்று வீசினேன் அடுத்த தூண்டிலை.

"நீயே கேளப்பா...பத்து நாட்கள் முந்திதானே பர்மாபஜாரிலிருந்து தொண்ணூற்றைந்து ரூபாய் கொடுத்துப் புதுசா 'ஷீபர்' பேனா வாங்கி வந்தேன்?....."

"பத்து நாட்கள் முந்தி இல்லே, மூணு நாட்கள் முந்தி... ஆமாம்,

"நீ ரொம்ப ஒழுங்கு! கும்பகோணம் போறப்போ ரயில் வாஷ் பேஸினிலே மோதிரத்தைக் கழற்றி வைச்சுட்டு வந்த மகா புத்திசாலி, நீ! என்னைப் போய்ப் பெரிசா சொல்ல வந்துட்டியே!"

"போறும், போறும்.... உங்களைப் பத்தித்தான் எனக்கு நன்றாத் தெரியுமே!.... எதுக்கு இந்த அறிமுகமெல்லாம்?..... இப்போ அடுத்தபடியா செய்ய வேண்டியதைப் பத்திப் பேசுவோம்!" என்றேன் சமாதானமாக.

"வேறு என்ன? பேனாவுக்குத் தலை முழுக வேண்டியதுதான்!"

" அதுக்கு முன்னாலே முரளிக் கண்ணனுக்கு நல்ல 'நெர்வ் — டானிக்' வாங்கிக் கொடுக்கச் சொல்லுங்கோ! நானும் ஆறு மாசமா கேட்டுண்டிருக்கேன்...... 'மறந்துடுத்து!'ன்னு மறக்காமல் சொல்லிண்டிருக்கார்!" என்று சரோஜா என் பொரிசை நாடினாள்.



அது என்ன ஆச்சு?... உடைஞ்சு போயிடுத்தா?"

"உடைஞ்சு போனால் ரிப்பேர் பண்ணிக்கலாமே! தொலைஞ்சு போயிடுத்து!"

" எப்படி ?"

"இந்த மகாசமர்த்து இருக்கானே, அதை முரளிக் கண்ணனிட்டே ஸ்கூலுக்குக் கொடுத்தனுப்பி யிருக்கிறாள். ஸ்கூல்லே யாரோ பையன் இரவல் கேட்டானும். அந்தச் சின்ன சமர்த்து கொடுத்துட்டு வந்து நிக்கறது!"

"அதனாலென்ன? உன் பையன் யார்கிட்டே கொடுத்தான்னு தெரிஞ்சுண்டு, அவன் வீட்டிலே போய்க் கேட்டு வாங்கிண்டு வர வேண்டியது தானே? சுலபமாச்சே!"

"நீ நினைக்கிறபடி அது அவ்வளவு சுலபமில்லேப்பா!"

" ஏன் ?"

"யார்கிட்டே கொடுத்தான்னு இவனுக்கு நினைவு இருந்தாத்தானே?"

"தொலைஞ்சது போ!" என்றேன் நான். பலராமன் — சரோஜா இரண்டு பேருக்கும் அசாத்திய ஞாபக மறதி உண்டு. அவர்களுக்குப் பிறந்த பையன் பின்னே எப்படி இருப்பான்?....

"நீங்களே சொல்லுங்கோ! முதல் தேதியன்னிக்குச் சம்பளத்தை வாங்கி அப்படியே ஆபீஸ் மேஜையின் மேலே வைத்துவிட்டு வந்தவர்தானே இவர்? பிள்ளையும் அப்பா மாதிரியே இருக்கான்!" என்று குற்றப் பத்திரிகை படித்தாள் சரோஜா.

முகுந்தன்

"நீதான் நிறைய வைத்திய புத்தகமெல்லாம் — புரிகிறதோ, புரியல்லியோ — படிப்பியே, நல்ல மருந்தா ஏதாவது சொல்லேன்!" என்றான் பலராமன் என்னிடம்.

அப்படியே செய்வதாகச் சொல்லி விட்டு வந்து என்னிடமிருந்த புத்தகங்களையெல்லாம் புரட்டினேன். மருந்து பற்றிய குறிப்பு எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் வேறொரு முக்கியமான குறிப்பு சிக்கியது. 'எவ்வளவுக்கெவ்வளவு ஒரு பொருள்மீது நாம் அக்கறை செலுத்துகிறோமோ, அந்த அளவுக்குத்தான் அந்தப் பொருள் பற்றிய ஞாபகமும் நமக்கு இருக்கும்' என்று உளநூல் பேராசிரியர் ஒருவர் சொல்லியிருந்தார்.

பலராமனிடம் அதையே சொன்னேன், நான் அவனைச் சந்தித்த போது. (அன்றைக்குப் பிள்ளையாண்டான் டிபன்பாக்ஸைத் தொலைத்து விட்டு வந்திருந்தான். சாப்பிட்ட பிறகு, எங்கே வைத்தோம் என்று ஞாபகம் இல்லையாம்!)

"ஸ்கூலுக்கு என்னென்ன எடுத்துக் கொண்டு போகிறான் என்பதில் அக்கறையாக இருக்கச் சொல்! ஞாபகசக்தி வளரும்!" என்றேன்.

"சரி, பார்க்கலாம்!" என்றான்.

நான்கு நாட்கள் கழித்துப் பலராமனைப் பார்த்தபோது, "பலன் ஏதாவது தெரிந்ததா?" என்று கேட்டேன்.

"போச்சு, போச்சு! எல்லாமே போச்சு!" என்று புலம்பினான்.

"புத்தகம், செருப்பு, டிபன்பாக்ஸ்—எல்லாத்தையுமே தொலைச்சுட்டு வந்து நிக்கறான் உன் பையன்?"

''இல்லேப்பா! அதெல்லாம் பத்திரமாகத் தான் இருக்கு...பையனேத்தான் காணல்லே!''

''என்னது!''

''இன்னிக்குச் சாயந்திரம் புஸ்தகப் பை, டிபன்பாக்ஸ், பேனு, வாட்டர் பாட்டில் — எல்லாத்தையும் இன்னொரு பையன் மூலமா வீட்டுக்குக் கொடுத்து அனுப்பிச்சுட்டான் முரளி. ஆனல் அவன்தான் இன்னும் வந்து சேரல்லே!''

''சரி, இளம்பு. அவனுடை கிளாஸ்மேட்ஸ் வீட்டுக்கெல்லாம் போயிட்டு வருவோம்!'' என்று ஸ்கூட்டரில் ஏறி உட்கார்ந்தேன்.

மூன்றரை மணி நேரம் சுற்றிய பிறகு ராயப்பேட்டையில் ஒரு கிளாஸ்மேட் வீட்டில் முரளிக் கண்ணனைக் கண்டுபிடித்தோம்.

பலராமனையும் பையனையும் டாக்ஸியில் ஏற்றினேன். ''நீ சொன்ன யோசனை பைசா பொறாது.... முரளிக் கண்ணனுக்கு ஏதாவது மருந்துதான் வாங்கிக் கொடுத்தாகணும்!'' என்றான் பலராமன்.

''யோசித்துச் சொல்கிறேன்!'' என்றேன்.

மறுநாள் ஒரு பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்த போது அந்த விளம்பரம் கண்ணில் பட்டது. ''யானை போல் ஞாபக சக்தி பெற வேண்டுமா? இன்றே எமது திருத்தணி சித்த வைத்திய சொமணி டாக்டர் ஜடாமுனியின் யானை லேகியத்தை வாங்கிச் சாப்பிடுங்கள்!'' என்று விளம்பரம் பண்ணியிருந்தார்கள்.

அன்று மாலேயே பலராமனையும் அழைத்துக் கொண்டு டாக்டர் ஜடாமுனியிடம் போனேன்.

''இந்த ஞாபக சக்தி லேகியம்....'' என்று ஆரம்பித்தேன்.

''எதைச் சொல்கிறீர்கள்?'' என்று என்னேயே கேட்டார் ஜடாமுனி.

''பத்திரிகையில் விளம்பரம் பண்ணியிருந்தீர்களே?''

''எந்தப் பத்திரிகையில்?''

நான் பத்திரிகையின் பெயரைப் பார்த்து வைத்துக் கொள்ளவில்லே. எனவே, ''எல்லாப் பத்திரிகைகளிலும்தான்!'' என்று சொல்லிச் சமாளித்தேன்.

''சரி, விளம்பரம் இருக்கட்டும்... எதற்காக வந்தீர்கள்? உங்கள் பத்திரிகைக்கும் விளம்பரம் வேண்டுமா?''

''இல்லே, லேகியம்தான் வேண்டும்!''

''லேகியம் உயிருள்ள ஆசாமிகளுக்கு, ஐயா! பத்திரிகைக்கு லேகியமாவது! பத்திரிகை எங்கேயாவது லேகியம் தின்னுமா?''

''இல்லே சுவாமி! லேகியம் எங்களுக்குத்தான்!''

''அப்படியா! கொஞ்சம் இருங்கள்!'' என்று சொல்லிவிட்டு எழுந்து, திரைக்கு அப்பால் போனர்.

பிறகு ஒரு தகர டப்பாவுடன் வந்து சேர்ந்தார். ''இதுதான் லேகியம்.... தினமும் மூன்றுவேளே சாப்பிடணும்....''

மருந்தை ஐந்து ரூபாய் கொடுத்து வாங்கிக் கொண்டு திரும்பினேம்.

வரும் வழியில் திடுமென்று ஒரு சந்தேகத்தைக் கிளப்பினன் பலராமன். ''ஆமாம், லேகியம் நமக்குத்தானே?''

''என்ன கேள்வி இது, அர்த்தமில்லாமல்?''

''இல்லே, 'இந்த லேகியம் மனிதர்களுக்கு இல்லே; யானைகளுக்குத்தான்' என்று ஜடாமுனி சொல்ல மறந்து விட்டிருப்பாரோ என்ற சந்தேகம் தோன்றியது.... அவ்வளவுதான்!''

நான்கு நாட்கள் கழித்துப் பலராமன் வீட்டுக்குப் போனேன். வாசலில் முரளிக் கண்ணன் உட்கார்ந்திருந்தான். ''என்னடா, லேகியம் எப்படி இருக்கு?'' என்று கேட்டேன். ''யார் மாமா, நீங்க?'' என்று பையன் என்னைத் திருப்பிக் கேட்டான். விடுவிடென்று உள்ளேபோய் நானே லேகிய டப்பாவைத் தேடி எடுத்து, என் கையாலேயே அதை அவர்கள் வீட்டுக் கிணற்றில் வீசி எறிந்த பிறகுதான் ஆத்திரம் அடங்கியது.

''சரியப்பா.... லேகியமும் ஒத்து வரல்லே. வேறு என்னதான் செய்யலாம், சொல்லு!'' என்று ஆலோசனை கேட்டான் பலராமன்.

''முன்னே ஒரு மருந்து பற்றிப் படித்ததாக ஞாபகம். அது நிச்சயம் ஞாபகசக்திக்குத்தான். ஆனல் அது ரொம்பக் 'காஸ்ட்லி' ஆச்சே! உனக்குக் கட்டுப்படியாகுமா?....''

''அதையெல்லாம் பார்த்தால் முடியுமா? நீ சும்மா சொல்லு!''

''அதாவது பாதாம் பருப்பு இருக்கிறதல்லவா?''

''ஆமாம்.....''

''தினசரி அதிலே ஒரு பத்துப் பருப்பைத் தண்ணீரிலே ஊற வைத்து, தோலே உரித்து, பசு நெய்யில் வறுத்து, நாட்டுச் சர்க்கரையிலே போட்டுப் புரட்டிச் சாப்பிட வேண்டும்...மூன்று மாதங்கள் இப்படிச் செய்தால் போதும்.... ஞாபக சக்தி 'இம்ப்ரூவ்' ஆகிவிடும்.......''

''சரி, அதையும் செய்து பார்த்துவிடுகிறேன்!''

பாதாம் பருப்பு வைத்தியம் தொடங்கிய பத்து நாட்கள் வரை நான் பலராமனைப் போய்ப் பார்க்கவில்லே. அப்புறம் அவனுகவே போன் செய்து வீட்டுக்கு வரச் சொன்னன். போனேன்.

''என்ன, பாதாம் பருப்பு மகிமை எப்படி இருக்கிறது?''

''பரவாயில்லே... பையனுக்கு ஞாபகசக்தி அதிகமாகிக் கொண்டுதான் வருகிறது..... நல்ல முன்னேற்றம் தெரிகிறது.....''

''பேஷ்! பேஷ்! வெரிகுட்!''

''அவசரப்படாதே! நேற்று புதுப் பென்சிலேத் தொலேத்தான்.... முந்தாநாள் ஐந்து ரூபாய் நோட்டைச் சில்லறை மாற்ற எடுத்துக் கொண்டு போய் மூன்று ரூபாய் மட்டும் வாங்கி வந்தான்.....''

''இதற்குப் பெயர்தான் முன்னேற்றமா?''

''இரு, நான் இன்னும் விஷயத்துக்கே வரல்லே.... இத்தனே ஞாபகமறதி இருந்தாலும் தினமும் 'அம்மா! பாதாம் பருப்பு எங்கே?' என்று கேட்டு வாங்கிச் சாப்பிட மறப்பதில்லே.... அது முன்னேற்றம் இல்லாமல் வேறு என்னவாம்?''

''சரி, வேறு என்ன விஷயம்?''

''அப்புறமாயி தினமும் என்னே முறைத்து முறைத்துப் பார்க்கிறன்..... அவனுலே எனக்கு இராத் தூக்கம் கெட்டுப் போய் விட்டது......''

# பஜாஜ் விசிறிகள்

# வைபோகம்




# பஜாஜ் பஹார்

சீலிங் மற்றும் மேசை மின் விசிறிகள்

## வசதியில் ஒரு புதிய அனுபவம்





















**பஜாஜ்** எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்

45-47, வீர் நரிமான் ரோடு, பம்பாய்-1
இந்தியாவெங்கிலும் கிளைகள்

heros' BE-119 A TH




**மும்மூர்த்திகள் !**

லண்டனில் 10, டௌனிங் தெருவில் வசிப்பவர் பிரிட்டிஷ் பிரதமர். எல்லோருக்கும் தெரியும். நம்பர் 11, 12ல் வசிப்பவர்கள் யார் யார்?

நம்பர் 11ல் வசிப்பவர் நிதி அமைச்சர்; 12-ல் அரசாங்கப் பிரதம கொறடா.

டிட்பிட்ஸ் - பாபு

"யார் அவன் அப்புநாயர் ? அவன் உன்னை முறைப்பானேன் ? உன் தூக்கம் கெடுவானேன் ? எதுவுமே புரியவில்லையே!"

"புரியும்படி சொல்றேன், கேளு..... அப்புநாயர்தான் நம்ம வீட்டுக்கு மளிகைச் சாமான் சப்ளை... பாதாம் பருப்பு வாங்கிய கணக்கில் நிறையப் பணம் பாக்கி வைத்துவிட்டேன்.... அவன் முறைக்காமல் என்ன செய்வான் ? போகிற போக்கைப் பார்த்தால் பாதாம் பருப்பு வாங்கியே போண்டி ஆகிவிடுவேன் போலிருக்கிறது !"

"பையன் ஒருத்தனுக்காகவா நிறைய பாதாம் பருப்பு வாங்குகிறாய்?"

"ஏன், எனக்கும் சரோஜாவுக்கும் மட்டும் ஞாபக மறதி இல்லையா, என்ன?...எல்லோருமாகத்தான் பாதாம் பருப்பு சாப்பிடுகிறோம். தினசரி கால் கிலோ!.... அது போகட்டும், அப்புநாயரைச் சமாளிக்க ஒரு வழி சொல்லேன் !....."

"முதலில் உன் நாக்கை அடக்கு....பாதாம் பருப்பு சாப்பிட வேண்டும்போல் தோன்றுகிறபோதெல்லாம் ஒரு சொட்டு வேப்பெண்ணெயை எடுத்து அடிநாக்கிலே தடவிக் கொள்! சரியாகப் போய்விடும்!" என்று சொல்லிவிட்டு வந்தேன்.

ஒரு மாதம் கழித்துக் குடும்ப சகிதம் வீட்டுக்கு வந்தான் பலராமன். "பாதாம் பருப்பு சமாசாரம் என்ன ஆச்சு?" என்று மெதுவாகக் கேட்டேன்.

"போகிற போக்கைப் பார்த்தால் அப்புநாயர் 'அட்டாச்மெண்ட்' ஆர்டருடன் ஆபீஸுக்கே வருவான் போலிருந்தது... பாதாம் பருப்புக்கு 'டாட்டா' சொல்லி விட்டேன்."

"இப்போ ஞாபக சக்திக்கு என்ன சாப்பிடுகிறீர்கள் ?"

கையோடு கொண்டு வந்திருந்த பத்திரிகை ஒன்றை என் முன் நீட்டினான். "பார்த்திருக்கிறாயா இதை.....?"

"பார்த்திருக்கிறேனே!"

"இதன் ஆசிரியர் சகலகலாவல்லவர் ; ஜோசியம், வைத்தியம், கைரேகை, நியூமராலஜி எல்லாம் தெரிந்தவர் !"

"அட, எல்லாம் தெரியும்பா ! இவர் என்ன மருந்து சொல்லியிருக்கிறார் ஞாபக மறதிக்கு ? அதைச் சொல்லு !"

"தூதுவளைக் கீரையைத் துவட்டல் பண்ணிச் சாப்பிட வேண்டுமாம்!"

"அதையும்தான் செய்து பாரேன் !"

"செய்யாமல் விடுவேனா ! நமக்காச்சு, அதுக்காச்சு! பார்த்துவிடுகிறேன், ஒரு கை!"

அப்புறம் ஒரு பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் தோட்டத்தைக் கொத்திக் கொண்டிருக்கும்போது தலைவிரி கோலமாக ஓடி வந்தான் பலராமன். "நீதாண்டா என்னைக் காப்பாத்தணும் ! எனக்கு என்ன பண்றதுன்னே தெரியலே!" என்றான்.

"என்ன சங்கடம் இப்போ? பையன் ஞாபக சக்தி அடியோடு பாழாய்ப் போயிடுத்தா?"

"அதெல்லாம் இல்லேடா.... எல்லாம் அந்தப் பாழாய்ப்போன தூதுவளைக் கீரையாலே வந்த வினை!"

"என்ன ஆச்சு ?"

"எங்க எல்லோருக்குமே ஞாபக சக்தி அதிகமாப் போச்சு!....."

"வெரி குட்! நல்லதுதானே ?"

"நல்லதா....? நாசமாய்ப் போச்சு !.... சரோஜா என்னடான்னா கல்யாணமான புதிசிலே நான் கல் — இழைச்ச வளையல் பண்ணித் தரேன்னு 'ப்ராமிஸ்' பண்ணினதை இப்போ நினைச்சுண்டு கேக்கறா.... மூணும் வருஷம் தீபாவளிக்கு இரண்டு பட்டுப் புடவை வாங்கிக்க 'பெர்மிஷன்' கொடுத்ததை இப்போ ஞாபகப்படுத்திண்டு, 'கொண்டு வா, பணத்தை'ங்கிறா.....!"

"முரளிக் கண்ணன்?"

"அதை ஏன் கேட்கிறே? அவன் ஒண்ணாங்கிளாஸ் பாஸ் பண்ணினவுடனே 'மெக்கானோ' செட் வாங்கித் தரேன்னு சொன்னேனாம்.... இரண்டாவது கிளாசுக்குக் கிரிக்கெட் செட்... இப்படி எல்லாத்தையும் ஞாபகப்படுத்திண்டு இப்போ கேக்கறான்....."

"அதாவது மறந்து போனதையெல்லாம் திடும் திடும்னு ஞாபகம் வரதாக்கும்?"

"அதுதாண்டா, படு சங்கடம்!.... என் விஷயத்தைக் கேளு. நிறையப் பேர்கிட்டே அப்பப்போ கைமாத்து வாங்கிட்டு மறந்து போனதெல்லாம் இப்போ ஞாபகம் வந்து தொந்தரவு கொடுக்குது....."

"எனக்குக்கூட நீ முப்பது ரூபாய் பாக்கி!"

"எல்லாம் ஞாபகம் வரதுடா... இந்த மாதிரி அநாவசியமான ஞாபகமெல்லாம் வந்து எங்க நிம்மதியையே குலைச்சுடும்போல் இருக்கு...ஆமாம், தூதுவளைக்கு மாற்று மருந்து ஏதாவதிருந்தால் சொல்லேன்!....."

பாவமாக இருந்தது எனக்கு. 'சித்த வைத்திய சிந்தாமணி'யைப் புரட்டி, மாற்று மருந்தைக் கண்டு வாங்கியும் கொடுத்தேன்.

இப்போது பலராமனும், சரோஜாவும், முரளிக் கண்ணனும் பரம சந்தோஷமாக இருந்து வருகிறார்கள். முரளிக் கண்ணன் நாள் தவறாமல் பள்ளிக்கூடத்தில் எதையாவது தொலைத்து விட்டு வருகிறான் ; சரோஜா 'காஸ்' அடுப்பை அணைக்கத் தினசரி மறந்து போய் மாதக் கடைசியில் திண்டாடுகிறாள்; பலராமனோ ஆபீஸ் வேலையில் மறதியாகத் தப்புப் பண்ணிவிட்டுத் தினமும் டன் டன்னாக முதலாளியிடமிருந்து திட்டு வாங்கிக் கட்டிக் கொள்கிறான். மொத்தத்தில் அந்தக் குடும்பமே சந்தோஷமாக இருக்கிறது.

எனக்கு ஒரே ஒரு வருத்தம். பலராமனுக்கு நான் இவ்வளவு உதவி பண்ணினேனே, பயல் ஒரு வெறும் 'தாங்ஸ்' கூடச் சொல்லவில்லையே என்பதுதான் அது.

மறந்திருப்பான் போலிருக்கிறது!




## புதிய கட்டடம் தேவையா?

தமிழ் நாடு அரசு தன் தலைமைச் செயலகத்துக்கு (Secretariat) ரூபாய் நான்கு கோடி செலவில் புதிதாக ஒரு கட்டடம் கட்ட உத்தேசித்திருக்கிறதாம். இன்றைய நிலை நாம் அறிந்ததே. தாங்க முடியாத அளவுக்கு வரிப் பளு. விலைவாசிகள் உச்சாணிக் கொம்பில் ஏறி நிற்கின்றன. அந்நியப் படையெடுப்புப் பயம் முழுவதும் நீங்கியபாடில்லை. இந்நிலையில் நான்கு கோடி ரூபாய் என்பது சிறிய தொகையல்ல. மக்களுக்குப் பயன் தரும் நல்ல திட்டம் ஒன்றிலுக்கு இதனைச் செலவிடலாம். இன்றையச் சூழலில் நான்கு கோடி ரூபாய்ச் செலவில் புதிய கட்டடம் தேவைதானா என்பது சிந்தனைக்குரிய விஷயம்.

திருநெல்வேலி
9—3—72 ஆர். அனந்தராமகிருஷ்ணன்

## சர்க்கரைக் கார்டுக்கு நன்கொடை

நமது தமிழக முதல்வர் சட்ட மன்றத்தில் பேசும்போது பாதுகாப்பு நிதிக்காக அரசு அரசாங்க அதிகாரிகளேயோ அல்லது மற்றவர்களேயோ கட்டாயப்படுத்தவில்லை எனக் கூறினர். ஆனல் பாதுகாப்பு நிதிக்காக அரசாங்க அதிகாரிகள் பலர் நடந்துகொள்ளும் முறையைப் பார்த்தால் இது உண்மை தானு என ஐயம் ஏற்படுகிறது. தற்போது சர்க்கரை விநியோகக் கார்டு தரப்படுகிறது. இக்கார்டுகளை ஊரின் முக்கிய அதிகாரி விநியோகம் செய்கிருர். அந்தக் கார்டு வாங்குகின்ற அனைவரும் கண்டிப்பாக ஒரு ரூபாய் பாதுகாப்பு நிதிக்குக் கொடுக்க வேண்டும்; இல்லையென்ருல் அவர்களுக்குச் சர்க்கரைக் கார்டு கிடையாது என்று கூறுகிருர்கள். பாதுகாப்பு நிதிக்கு நன்கொடை என்ற பெயரில் கட்டாயமாக நடைபெறும் செயல் பொது மக்களுக்கு மிக்க வருத்தத்தை அளிக்கிறது.

கீழ்பென்னத்தூர்
12—4—72 எ. நடேச முதலியார்

## வெட்கம்! வெட்கம்!!

எங்கள் ஊரில் சாராயக் கடையை - காந்தி சிலை அருகிலே திறப்பதற்கு அனுமதித்தார்கள். காந்தீயத்தில் நம்பிக்கை உள்ளவர்களுக்கு இது மிகவும் வேதனை அளித்தது. அது போதாதென்று இப்போது ஒயின் ஷாப் ஒன்றுக்கு அதே இடத்தில் திறப்பதற்கு அனுமதித்துள்ளார்கள்.

அந்த ஒயின் ஷாப் திறப்பு அழைப்பிதழில் "காந்தி சிலைக்கு அருகில்" என்று பெரிதாக அச்சிட்டு இருப்பது வெட்கப்பட வேண்டிய விஷயமாகும்.

(அந்த ஒயின் ஷாப் திறப்பு அழைப்பிதழையும் இத்துடன் அனுப்பியுள்ளேன்.)

ஒன்று சிலைக்கு அருகில் கடைக்கு அனுமதி வழங்காமல் இருக்கட்டும்; அல்லது காந்தி சிலையையாவது வேறு இடத்துக்கு மாற்றட்டும்!

குளித்தலை
18—4—72 த. நடராசன்

## யார் பரிதாபத்துக்குரியவர்?

சமீபத்தில் மின்சார வாரியம் வேலைக்கான விண்ணப்பம் சம்பந்தமாகக் கிராம முன்சீப்பிடம் கையெழுத்து வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் எனக்கு ஏற்பட்டது. அவரிடம் சென்று கையெழுத்து வாங்கச் சான்றிதழை நீட்டினேன். உடனே அவர் பத்து ரூபாய் லாட்டரிச் சீட்டை எடுத்து என்னிடம் எறிந்து விட்டு, "பத்து ரூபாய் கொடுங்கள்" என்ருர். "நான் ஏழை. என்னிடம் பத்து ரூபாய் லாட்டரிச் சீட்டு வாங்கும் அளவுக்குப் பணம் கிடையாது" என்றேன். "நான் என்ன சார், பண்ணுவது? என்னிடம் பத்து ரூபாய் லாட்டரிச் சீட்டுகள் ஐம்பது கொடுத்து, பணமாகக் கொடுக்கும்படி கேட்டிருக்கிருர்கள். உங்கள் நிலைமையைவிட என் நிலைமை பரிதாபமானது சார்!" என்ருர். இப்படி ஏழைகளைக் கட்டாயப்படுத்தி விற்கும் அளவுக்குத் தமிழ் நாடு அரசின் தரம் குறைந்துவிட்டதா?

இராசை
16—4—72 கே.எஸ். மனேராஜ்

## குடும்பப் பத்திரிகையில் ஆபாசம்!

ஆபாசப் பத்திரிகைகளைத் தடை செய்ய வேண்டும் என்று பலரும் கூறுகிருர்கள்; எழுதுகிருர்கள். ஆனல் நாளுக்கு நாள் அவை அதிகமாகி வருவதையே காண்கிறேம். ஏதோ ஒரு சாரார்தாம் அவற்றைப் படிக்கிருர்கள்.

ஆனல் குடும்பப் பத்திரிகைகள் என்ற போர்வையில் அனைவரும் படிக்கக் கூடிய விஷயங்களைத் தாங்கி வருவதுபோல நடித்துக் கொண்டு, எப்படியாவது வாரா வாரம் இரண்டு அல்லது மூன்று ஆபாசக் கதைகளைப் புகுத்தி வரும் இதழ்களை யாரும் கண்டிக்கக் காணுமே! இந்தப் பத்திரிகைகளை வீட்டிலுள்ள பாட்டி முதல் பேரன் வரையில் படிக்கிருர்களே! பெண்களின் மேலாடையைப் 'பூணூல்' மாதிரி வரையும் 'ஸ்பெஷல்' சித்திரக்காரரின் கைவண்ணம் வேறு இதற்காக!

'ரெட்லைட் ஏரியா'வில் இருப்பவள் நடத்தையைப் பற்றி யாரும் வருத்தப்படப் போவதில்லை; ஆனல் குடும்பங்கள் வாழும் பகுதியில் இப்படிப்பட்ட ஒருத்தி குடிபுகுந்தால் அவளை விரட்டியடிப்பதில் அனைவரும் முனைகிறேம் அல்லவா? அதைப் போல் குடும்பப் பத்திரிகை என்ற பெயரில் ஆபாசத்தை வளர்க்கும் இதழ்களைத்தான் முதலில் தடை செய்ய வேண்டும்!

கும்பகோணம்
18—4—72 கே. ரகுபதி

நிலவறை முதல்
கூரைவரை உங்கள்
கட்டிடத்தை
வாட்டர்ப்ரூஃப்
தன்மையுடையதாக
வைத்திருக்க
உபயோகியுங்கள்—



# அக்கோப்ரூஃப்

கான்க்ரீட் மற்றும் சிமெண்ட் மார்ட்டரும் கூட தன் வேலையைத் திறம்பட செய்கிறது—முழு நிறைவு மற்றும் வலுவுப் பண்புகளை ஒரு சிறிதும் குறைக்காமல். **அக்கோப்ரூஃப்** கட்டிடங்களைக் காக்கிறது, நிலவறைகளை நீர்புகாதவையாகவும், ஓதமற்றவையாகவும் வைத்திருக்கிறது.

**அக்கோப்ரூஃப்,** குறிப்பாக கீழ்க்கண்டவை போன்ற நீர்த்தேக்க அமைப்புகளைக் கட்டுவதில் உபயோகிக்கச்சிபாரிசு செய்யப்படுகிறது—

- **நீர்த் தொட்டிகள்**
- **சிசர்வாயர்கள்**
- **நீர்க் குழாய்கள்**
- **சாக்கடைகள்**

உங்கள் தேவைகளுக்கு அருகாமையில் உள்ள தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கோ ஆஃப இந்தியா லிமிடெட்டின் கிளையையோ அவர்களுடைய விநியோகஸ்தர்களையோ அணுகுங்கள்:

**எஸிஸி**

***‘தரம்சிறந்த சிமெண்டிற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்’***

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**

**தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிட்.**

SISTAS CMI-479 TI

# உலக சம்ஸ்கிருத மகாநாடு

தில்லியில் விக்ஞான பவன் பல மகாநாடுகளைக் கண்டிருக்கிறது. ஆனால் மார்ச் மாதம் கடைசி வாரத்தில் அது கண்ட உலக ஸம்ஸ்கிருத மகாநாட்டைப் போல் மற்றொன்றை அது கண்டதில்லை எனலாம். நாற்பதுக்கு மேற்பட்ட வெளிநாடுகளிலிருந்து வந்த அறுபதுக்கு மேற்பட்ட வெளிநாட்டு ஸம்ஸ்கிருதப் புலவர்களும் ஆயிரத்து நானூற்றுக்கு அதிகமான இந்திய ஸம்ஸ்கிருத வித்துவான்களும் கூடி நடத்திய இம்மகாநாடு தனித்ததொரு மங்களப் பொலிவுடனும் புனித மன எழுச்சியுடனும் நிகழ்ந்தது. 'வஸுதைவ குடும்பம்'—'உலகனைத்துமே ஒரு குடும்பம்' என்ற சீரிய ஸம்ஸ்கிருத முதுமொழி ஒன்றைத் தனக்கு லட்சிய வாசகமாக இந்த மகாநாடு வைத்துக் கொண்டது. இதன் முழுப் பொருத்தமும் நிகழ்ச்சிகளிலும், பங்கேற்றுக் கொண்டவர்களின் அறிவுரைகளிலும் நன்கு புலனாயிற்று.

'கலை, அறிவு, ஒழுக்கம் எனும் சிறப்புக்கள் வாய்ந்த பழைய மொழிகளிலும் அவற்றின் இலக்கியங்களிலும் உலகம் முழுதுமே படிப்பு குன்றி வருகிறது' என்பதைக் குறித்து இந்தியக் கல்வி மந்திரி செய்த பிரேரணையை ஒட்டி இம்மகாநாடு அமைந்தது. ஸம்ஸ்கிருத மொழி, இலக்கியம், கல்வி இவற்றில் உலகம் முழுவதும் போற்றும்படி இன்றும் பயன்படும்படியான உண்மைகளும் குறிக்கோள்களும் இருக்கின்றன. அவற்றை உலகம் மறக்காது பயில வேண்டும் என்ற கருத்தை யுனெஸ்கோ எடுத்துக் காட்ட, இந்திய சர்க்கார் உலக ஸம்ஸ்கிருத மகாநாடு ஒன்றை யுனெஸ்கோவின் ஒத்துழைப்பைக் கொண்டு நடத்தலாம் என்று தீர்மானித்தது. அதை ஒட்டி இம்மகாநாடு கூட்டப்பட்டது. ஜனவரியில் நடக்க வேண்டிய இந் நிகழ்ச்சி பங்களா தேசப் போர் காரணமாக ஒத்தி வைக்கப்பட்டது. மார்ச் 26ந் தேதி முதல் 31ந் தேதி வரையில் இந்திய கல்வி இலாகாவின் ஆதரவில் இம்மகாநாடு நடந்தது.

மகாநாட்டின் நிகழ்ச்சிகள், ஆராய்ச்சிக் கூட்டங்கள், விரிவுரை வாசிக்க வேண்டிய விஷயங்கள், ஸம்ஸ்கிருத சம்பந்தமாய் நிரூபிக்க வேண்டிய சிறப்புக்கள், காட்சிகள், கலை நிகழ்ச்சிகள் இவை எல்லாவற்றையும் ஏற்பாடு செய்ய வேண்டிய குழுவுக்கு டாக்டர் வே. ராகவன் அவர்களைத் தலைவராய் வைத்துக் கொண்டு மகாநாட்டை நடத்தினார்கள். 1. நாட்டின் அந்தந்தப் பிரதேசங்களுக்கு ஸம்ஸ்கிருத இலக்கியத்தை வளர்த்ததிலுள்ள பங்கு: வெளிநாடுகள் ஒவ்வொன்றிலும் ஸம்ஸ்கிருத அறிவும், படிப்பும், ஆராய்ச்சியும் வளர்த்ததின் சரித்திரம். 2. ஸம்ஸ்கிருதத்துக்கும் பிற இந்திய, உலக மொழிகளுக்கும் இலக்கியங்களுக்கும் உள்ள தொடர்பு. பண்டைய காலத்தில் அரேபியா, மத்திய ஆசியா, சீனம், ஜப்பான், கொரியா, தென் கிழக்கு ஆசிய நாடுகள் இந்தத் தேசங்களில் ஸம்ஸ்கிருதப் பண்பாடு படர்ந்ததும், நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டதும், மதம், கலை, சிற்பம் இவை பரவியதும், ஸம்ஸ்கிருதத்திலுள்ள கலை, விஞ்ஞானங்களும். 3. ஸம்ஸ்கிருதத்தில் காணப்படும் உலக மனப்பான்மை; இன்றைய உலகும் ஸம்ஸ்கிருதமும். 4. ஸம்ஸ்கிருத ஆராய்ச்சித் துறைகள் பலவற்றில் புலவர் அவரவர் அனுப்பும் ஆராய்ச்சியுரைகள்—இப்படி நான்கு பெரும் பகுதிகளில் மகாநாட்டின் ஆராய்ச்சிக் கூட்டங்கள் நடந்தன.

வேதத்தின் பல சாகைகள், ஜடை, கனம் முதலிய விக்ருதிகள், வியாகரண ஸூத்ரங்களை மனப்பாடம் செய்யும் முறை. அவற்றை



எளிதில் கற்க ஒரு மேலவர் தயாரித்த யந்திரம், (Grammar Machine) அஷ்டாவதானம், யோகாப்பியாஸம், ஆயுர்வேதம், அந்தாதி சுலோகங்கள், ஸம்ஸ்கிருத கவி ஸம்மேளனம்—இவ்வாறான நிகழ்ச்சிகள் ஒருபுறம் நடைபெற்றன. வைதிகர்களுக்குச் சன்மானங்கள் வழங்கப்பட்டன.

ஓலைச் சுவடிகள், அவற்றில் காணும் அரிய நூல்கள், ஸம்ஸ்கிருத கல்வெட்டுக்களும் பண்டைய நாணயங்களும், ஓவியம் வரைந்த ஓலை, காகிதச் சுவடிகள், இவை கொண்ட பொருட்காட்சி ஒருபுறம் நடந்தது.

மகாநாடு மார்ச் 26ந் தேதி ராஷ்டிரபதி ஸ்ரீ கிரி அவர்களால் தொடங்கி வைக்கப்பட்டது: 31-ந் தேதி உபராஷ்டிரபதி பாடக்கின் ஸம்ஸ்க்ருத உரையுடன் முடிவடைந்தது. நடுவே மகாநாட்டில் கலந்து கொண்டவருக்கு ஒவ்வொரு நாளும் பல விருந்துகள் நடந்தன. இவற்றுள் ஒன்றில் ஸ்ரீமதி இந்திரா காந்தி கலந்து கொண்டு உலகப் புலவர்களுடன் இரண்டு மணி நேரம் தங்கியிருந்தார்கள். ஒரு நாள் மாலை தில்லி மக்கள் சேர்ந்தமைத்த குழுவின் ஆதரவில் நடந்த வரவேற்பு விழாவில் ஸ்ரீ ஸாஹு ஜைனும் ஸ்ரீமதி ரமா ஜைனும் வந்திருந்த வெளிநாட்டுவித்துவான்களுக்கும் விதுஷிகளுக்கும் பட்டு மேல் வஸ்திரங்கள் வழங்கினார்கள்.

ஸம்ஸ்கிருத மகாநாடு தன் நிகழ்ச்சிகளில் பலவற்றை ஸம்ஸ்கிருதத்திலேயே நடத்தியது. தொடக்க விழாவில் டாக்டர் ராகவன் ஸம்ஸ்கிருதத்தில் பேசினார். பல கட்டுரைகள் ஸம்ஸ்கிருதத்திலேயே படிக்கப்பட்டன. மூன்று முழு நிகழ்ச்சிகளில் பண்டிதர்கள் கூடி வாக்கியார்த்தங்களையும் கட்டுரைகள் படிப்பதையும் ஸம்ஸ்கிருதத்திலேயே நடத்தினர். பொதுக் கூட்டங்களிலும் சர்ச்சைகளிலும், நிகழ்ச்சிகளுக்கு வெளியே ஒருவரோடு ஒருவர் பேசும் போதும் வெகு சகஜமாய் ஸம்ஸ்கிருதம் பேசப்பட்டது. சில வெளிநாட்டினரும் ஸம்ஸ்கிருதத்திலேயே பேசினர். 'ஸம்ஸ்கிருதம் இன்றும் இந்த அளவில், இவ்வளவு சரளமாகக் கையாளப்படுவதை இம்மகாநாட்டின் மூலம் நன்கு உணர்ந்தோம்' என்று பல வெளிநாட்டுப் புலவர்கள் சொன்னார்கள். 'இனி பேசும் ஸம்ஸ்கிருதம்' (Spoken Sanskrit) என்ற வகுப்புக்களைத் தம் பல்கலைக் கழகங்களில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் இவர்களுக்குள் சிலர் பேசிக் கொண்டார்கள்.

ஸம்ஸ்கிருத மொழியானது, சாஸ்திர வாக்கியார்த்தங்கள், மொழி, இலக்கிய ஆராய்ச்சி — இவற்றில் மட்டும் அல்ல, இந்தியக் கலைகளையும், பண்பாட்டையும் அனாதி அவற்றின் அடிப்படையாயும், உயிராயும் தொன்றுதொட்டு இன்று வரையும் விளங்கி வருகிறது என்ற உண்மையை நிரூபிக்கப் பல கலை நிகழ்ச்சிகளையும் ஏற்பாடு செய்திருந்தது பாராட்டுக்குரியது. இந்தக் கலை நிகழ்ச்சிகளில் பெரும் பங்கு டாக்டர் வே. ராகவனைச் சாரும். தொடக்க தினத்தன்று ஸ்ரீ ஸியாராம் திவாரி ஸம்ஸ்க்ருத த்ருபத் பாட்டுக்களைப் பாடினார். 27ந் தேதி இரவு பாஸ மகா கவியின் அபிஷேக நாடகம் ஸம்பிரதாய முறையில், கேரள கலாமண்டலத்தினரால் ஆடி அபிநயிக்கப்பட்டது. ஸம்யுக்தா பாணிக்ராஹி கீதகோவிந்த அபிநயத்தை அளித்தார். பம்பாய் பிராமண சபையினர் காளிதாஸனின் விக்ரமோர்வசீய நாடகத்தை நடித்தனர். கல்கத்தா ப்ராச்யவாணி குழுவினர் ஸ்ரீமதி ரமா சௌத்ரியின் மேகதூத சம்பந்தமான புதுக் கற்பனை நாடகமொன்றை அளித்தனர். 30ந் தேதி இரவு டாக்டர் ராகவன் இயற்றிய 'அனார்கலி'யை (முஸ்லிம் கதையை ஸம்ஸ்க்ருதத்தில் எழுதிய நாடகத்தை) சென்னை ஸம்ஸ்க்ருத ரங்கத்தினர் நடித்தனர். இதுவே ஸம்ஸ்க்ருத நாடகத் தொடரில் சிறந்ததாகப் போற்றப்பட்டது.

31ந் தேதி முடிவு நிகழ்ச்சியானதும் இரண்டு மணி நேரம் ஜயதேவர் தொடங்கி இன்று வரையிலும் ஸம்ஸ்க்ருத மொழியில் இயற்றப்பட்ட கீர்த்தனங்களை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பாடினார்கள். இக்கச்சேரி கூடியிருந்த இரண்டாயிரம் மக்களை அமைதிக் கடலில் ஆழ்த்தி, மகாநாட்டுக்கு மங்களகரமான முடிவை அளித்தது.

ஜெய் ஸம்ஸ்கிருதம்!

— தேஜஸ்வீதீபன்



## மழை மர்மம்!

நல்லார் மேலும்
பொல்லார் மேலும்
மழை பெய்கிறது: ஆனால்
நல்லார் மேல்தான்
நன்றாய்ப் பெய்கிறது: காரணம்
நல்லார் குடையைத்தான்
பொல்லார் கூசாமல்
தூக்கும் சமயமாகத்
திருடிப் போகிறார்கள்!

-லார்ட் போவென்

-'தி பயனீயர் புக் ஆஃப் ஹியூமரஸ் வெர்ஸ்' என்ற புத்தகத்திலிருந்து தந்தவர்: 'கேளிவேல்'.



''முன்னே எல்லாம் எவர்சில்வர் பாத்திரம் வாங்கப் பறந்து வந்தாங்க இப்ப....''

''இப்பதான் உங்க பாத்திரங்களே பறக்குதே காத்துலே!''

# எழில் வருகிறது எகானமி வடிவுடன்






பிளாக்ரோஸ்—முழு மலர்ச்சியுற்ற பாரசீக ரோஜா மலர்களின் மணம் கமழ்வது.

பிக்வண்ட்—புது வசந்தத்தில் பூத்த மலர்களின் மென் மணம் கொஞ்சுவது.

இரண்டுமே எழில் கொழிப்பவை. தனி சிறப்புடன் திகழ்பவை.

தேரயா பிளாக்ரோஸ், பிக்வண்ட் இரண்டும்
உங்களுக்கு அதிகம் அளிக்க வடிவளவில் கூடியுள்ளன

# அம்மா



ரா. கணபதி



துறவி ராமகிருஷ்ணர் கைப்பிடித்தவளுக்கான தர்மத்தை மறக்கவில்லைதான். ஆறு மாதங்களுக்கொரு முறை அவளுக்கு முப்பது ரூபாய் கிடைக்க ஏற்பாடு செய்திருந்தது நினைவிருக்கலாம். ஆனால் நம் அம்மாவுக்கு அரை வருட காலம் பணத்தைக் காத்து வைக்கத் தெரியுமோ? ராமகிருஷ்ணருக்கு அளித்து வந்த ஏழு ரூபாய் மாதாந்தர சம்மானத்தை அம்மாவுக்குத் தொடர்ந்து அளிக்க வேண்டும்' என்று பவதாரிணி ஆலய நிர்வாகி த்ரைலோக்யநாத் விச்வாஸ் பெருமனத்துடன் முடிவு செய்தபோது, நமது புண்ணியபுருஷர் ராம்லால், ''விச்வாஸ்ஜி, அதெல்லாம் என்னத்துக்கு? சித்தப்பாவுக்குப் பணக்காரரான ஏகப்பட்ட சிஷ்யா இருந்தா. அவா சித்திக்குக் கனகாபிஷேகமாக்கும் பண்ணுவா'' என்று கூறி அந்த மானியத்தை நிறுத்தினார். இங்கே சாரதை தன் ஒரு குட்சிக்கு வேண்டிய உணவும் போதுமான அளவுக்கு இன்றித் தவித்தாள். நாலு அரிசியைக் களைந்து வைத்துக் கொண்டாள். தோட்டத்துக் கீரையை வெறுமே வேக வைத்துக் கொண்டாள். அதை மசித்துத் தாளிதம் செய்ய எண்ணெய், கடுகு, பருப்பு ஏது? அதெல்லாம் போகட்டும். கையில் காசு இல்லாததால் நம் அம்மா உப்புகூட இல்லாமல் உண்ண வேண்டியதாயிற்று — படி உப்பு காலணாவுக்கு விற்ற காலத்தில். ஆனால் இதை அவள் தானாக வெளியிட்டதே இல்லை. கணவர் விதி செய்தபடி ஒருவரிடம் கால் காசுக்குக் கைநீட்டவில்லை. தாய் வீடு செல்லவும் இல்லை.

இவற்றை அவள் பொருட்படுத்தவுமில்லை. அவள் பொருட்படுத்தியது ஒன்றைத்தான். தக்ஷிணேச்வரத்திலே வசித்த பதின்மூன்று ஆண்டுகள் கங்கையிலேயே ஸ்நானம் செய்த அவளுக்கு கங்காதேவியைப் பிரிந்திருப்பதே பெரிய துயரமாக இருந்தது. வெண்ணீர்ப் பெருக்கை எண்ணிக் கண்ணீர் உகுத்தாள்.

அரச மரத்தினடியில ஒரு வெண்மை பளிச்சிட்டது. தேவி அங்கே நோக்கினாள். அவளுடைய ஸ்வாமி அங்கு வந்து நின்றார். பக்கத்தில் நரேன், ராகால், பாபுராம் ஆகியோரும் நின்றனர். ராமகிருஷ்ணரின் பாதத்திலிருந்து கங்கை பிரவாகமிட்டு வந்தது!

''ஆஹா, ஸ்ரீமந் நாராயணனின் பாதத்தில் கங்கை பிறந்தாள் என்பார்களே, இவர்தானே எல்லாமும்!'' என்று எண்ணுகிறாள் அம்மா. ரகுவீரனின் பூஜா கிருகத்தருகேயிருந்து செம்பருத்தி மலர்களைப் பறித்துக் கொண்டு பதியிடம் ஓடுகிறாள். இன்னமும் அவர் அங்கேயே இருக்கிறார். கங்கையும் இங்கே காமார்புகூரில் அவர் காலடியிலிருந்து பொசிகிறது. செம்மலர்களைக் கங்கைக்கு அர்ச்சிக்கிறாள் தேவி.

டாகுர் பேசுகிறார்: ''அம்மா, ஊரார் பேசறாளேன்னு கங்கணத்தைக் கழற்றிவிடாதே. உனக்கு வைஷ்ணவ தந்திரம் தெரியாதோ?''

''தெரியல்லியே.''

''இன்னிக்குச் சாயங்காலம் கௌரி தாஸி வருவா. அவ சொல்லுவா.''

ராமகிருஷ்ணர் நரேனின் உடலுக்குள் புகுந்து மறைகிறார்! அவர்களும் மறைகிறார்கள். கங்கையும் மறைந்தது— சரச்சவடே இன்றி.

அன்று பிற்பகல் கௌரியம்மை மெய்யாலுமே வந்து சேர்ந்தாள்.

''அம்மா, உங்க கையிலேருந்து கங்கணம் இறங்கவே கூடாது. வைஷ்ணவ தந்திரங்களிலே பகவான் எடுக்கிற ஸ்தூல சரீரத்துக்கு முக்கியத்துவமே கொடுக்கவில்லை. அமரமான ஆத்மாவே பகவானுடைய சரீரம். நம்ம டாகுர் ஸ்ரீமந் நாராயணன் இல்லையா? நீங்க மகாலக்ஷ்மி இல்லையா? உங்களுக்கு ஏது வைதவ்யம்? சம்பத்துக்கெல்லாம் அதிதேவதையான உங்க கையிலேருந்து கங்கணம் கழண்டால், உலகத்துக்கே உத்பாதமாயிடும்'' என்றெல்லாம் உத்வேகத்துடன் கூறினாள் கௌரியம்மை.

அகிலாண்டேச்வரியின் தாடங்கம் அவளது திருச் செவியிலிருந்து இறங்கினால் உலகுக்கே உற்பாதம் உற்பவிக்கும் என்பதால்தான், நஞ்சுண்ட சிவபிரானும் உயிர் தப்பினான் என்று ஆதி சங்கரர் போற்றினார் அன்றோ?

சம்பத்துக்கெல்லாம் அதி தேவதையான சாரதா தேவி எத்தகைய வறுமையில் வதங்குகிறாள் என்பதைப் பிரத்தியட்சமாகப் பார்த்து விட்டாள்

கௌரி. அதுவரை சிஷ்ய கோடிகள் அந்த ஒரு ஜீவன் சொந்தக் கிராமத்தில் வாழ்வதற்கு அசௌகரியம் இராது என்றே எண்ணினர். கௌரி திரும்பிய பின்தான் ஏனையோருக்கு உண்மை நிலை தெரிந்தது.

அந்த நாளில் கல்கத்தாவிலிருந்து காமார்புகுருக்கு வருவது அவ்வளவு சௌகரியமல்ல. மேலும் அம்மாவின் மகிமை இன்னமும்கூட ராமகிருஷ்ணரின் அத்யந்த பக்தர்களுக்கும் அதிகம் தெரியவில்லை. அவளது செல்லப் 'பசங்கள்' இப்போது வீடு வாசலையெல்லாம் விட்டு, விட்டாரின் எதிர்ப்பையும் வாங்கிக் கட்டிக்கொண்டு, வரநகரத்தில் ஒரு பேய் உலாவும் — அல்லது பேய் உலாவுவதாக வதந்தி உலாவும் — பாழ் வீட்டில், 'ராமகிருஷ்ண மடம்' அமைத்துக் கொண்டிருந்தனர். இப்போது அவர்கள் பிரமச்சரியத்திலிருந்து ஒரு படி மேலே போய்விட்டனர். இன்று அவர்கள் சந்நியாசிகள். ராகால் பிரம்மாநந்தராகி விட்டார்; பாபுராம் பிரேமாநந்தராகி விட்டார்; காளி அபேதாநந்தராகிவிட்டார்; சரத் சாரதாநந்தராகவும், யோகின் யோகாநந்தராகவும், நிரஞ்ஜன் நிரஞ்ஜனாநந்தராகவும், சாரதாபிரஸன்னன் திரிகுணாதீதராகவும், தாரக் சிவாநந்தராகவும், சசி ராமகிருஷ்ணாநந்தராகவும் பரிணமித்து விட்டனர். அநாமதேயமாகச் சஞ்சாரம் செய்ய விரும்பின நரேன், அப்போது சந்நியாச நாமம் சூட்டிக் கொள்ளவில்லை. டாகூர் உயிர் வாழ்ந்தபோது சுரேந்திரநாத் மித்ரா அவருக்கு அளித்து வந்த சிறு காணிக்கையை இப்போது நம் இளம் சாதுக்களுக்கு அளித்து வந்தார். லௌகிகமாகச் சகல சௌகரியங்களுடனும் வாழ வசதி படைத்த அந்த யௌவனத் துறவிகள் பசியிலும் பட்டினியிலும், மாற்று ஆடையுமின்றி, குரு



நாதரைத் தியானித்துக் கொண்டு பரமானந்தமாக வாழ்ந்து வந்தனர்.

இந்த பாவன புருஷர்களிடம் அடிக்கடி வந்தார் ஹரீஷ் என்ற இளைஞர். அவரும் எங்கே துறவு மேற்கொண்டு வாரோ என்று அஞ்சிய அவரது மனைவி, அவருக்கு 'மருந்து' வைத்தாள். அந்தக் காலத்தில் இதுபோன்ற அபாயகரமான அசட்டுத்தனம் நிறைய நடப்பதுண்டு.

ஹரீஷுக்கு மூளை கலங்கியது. தனக்கு மூளை கலங்குகிறது என்பதைப் புரிந்து கொண்டு; அம்மாவிடம் சரண் புகுந்தாலே உய்வு உண்டு என்று அந்த மூளைக்கு எப்படியோ எட்டியது! காமார்புகுருக்கு ஓடிவந்தார் ஹரீஷ்.

ஆனால் அம்மாவை சகல விதத்திலும் வதைத்தெடுக்க நினைத்த விதி — அல்லது அம்பாளின் சங்கற்பம்—ஹரீஷின் மூளைக் கோளாற்றை முற்றச் செய்தது. காமார்புகுரில் தான் இருந்த அவல நிலை போதாதென்று, சம்பந்தமற்ற ஒரு வைத்தியத்தை வைத்துச் சமாளிக்கிற துன்பமும் அம்மாவுக்கு வந்துற்றது. இதனினும் பீதிகரமான சோதனையும் உண்டாயிற்று!

ஒரு நாள் அம்மா ஏதோ அத்தியாவசிய காரியமாக அண்டை வீடொன்றுக்குச் சென்று திரும்பினாள். வாசலில் நின்று கொண்டிருந்த ஹரீஷின் பார்வையே நன்றாக இல்லை. அம்மாவுக்கு வெட வெடத்தது. உள்ளுக்குள் விரைந்தாள். அவள் வராந்தாவைத் தாண்டும்போது ஹரீஷ் வேகமாக அவளைத் துரத்தி வந்தார். சப்த நாடியும் ஒடுங்கியது சாரதைக்கு. ஆனால் ஒடுங்கி நிற்க இது சமயமில்லை என்று தன் முழு சங்கற்ப பலத்தையும் திரட்டிக் கொண்டாள். வெறியன் ஹரீஷை எதிர்த்துக் கொண்டு அவள் தெருப்பக்கம் ஓடுவதற்கில்லையாகையால் உட்புறமே ஓடினாள், வேங்கையைக் கண்ட மான்போல்.

ஹரீஷோ பித்தம் தலைக்கேறி அவளைத் துரத்தி வருகிறார். சரணடையவந்த தேவியிடம் இப்படி முறை தப்பி நடக்கிறார்! நெற்குதிரைச் சுற்றிச் சுற்றி ஓடினாள் தேவி. ஏழெட்டு முறை சுற்றினாள். இரைத்தது, நாக்கு உலர்ந்தது, கால்கள் இற்றன. மேலே நடந்ததை அம்மாவின் வார்த்தையிலேயே கேட்போம்.

''இனி ஓட முடியாது என்கிற நிலை வந்தது. அவ்வளவுதான். நின்ன இடத்திலேயே நின்னேன். என்னை உறுதிப்படுத்திண்டேன். **என்னுடைய பூரண ரூபத்துக்கு என்னை நானே கிளப்பிண்டேன்.** சட்டுனு அவனைக் கீழே தள்ளினேன். என் முழங்காலாலேயே அவன் மார்பை மிதிச்சுண்டு, அவனோட நாக்கைப் பிடிச்சு இழுத்தேன். அவன் கன்னத்திலேயே மாறி மாறி அறைஞ்சேன். அவனுக்கு மூச்சு முட்டித்து; எனக்கும் விரல் செவந்து கன்னிப் போச்சு. விட்டுட்டேன்.''

அடக்கப் பெட்டகமான அம்மா கற்பைக் காத்துக் கொள்வதற்காகப் பெற்ற எழுச்சி எத்தனை அற்புதமானது! தனது பூரண ரூபத்தைக் கிளப்பிக் கொண்டதாக அம்மா சொன்னதற்கு, அவள் சக்தி அவதாரமாகத் தன்னை உணர்ந்து அசுர சம்ஹாரிணியாகத் தன்னை எழுப்பிக் கொண்டதாகவே மெய்யடியார் பொருள் கொள்வர். குறிப்பாக, தச மஹா வித்தைகளில் ஒரு மூர்த்தியும், கூர்மாவதாரத்துக்கு சக்தி அளித்தவளுமான பகளா என்ற தேவியாக அப்பொழுது சாரதை உற்பவித்தாள் என்பர். ஏனெனில் பகளா அசுரரை வதைத்தபோது இவ்விதமே முழங்காலால் எதிரியின் மார்பை நசுக்கி நாக்கைப் பிடித்திழுத்தாளாம்.

நம் அம்மா ஹரீஷை வதைக்கவில்லை. அவரது தீய எண்ணத்தை வதைத்தாள். அந்தத் தீய எண்ணத்துக்குக் காரணமான மூளைக் கோளாற்றை வதைத்தாள்.

ஹரீஷ் காமார்புகுருக்குச் சென்று அம்மாவுக்குத் தொல்லை தருவதாகத் தகவல் அறிந்த நிரஞ்சனானந்தர் வரநகரத்திலிருந்து அங்கு விரைந்தார். அவரைக் கண்டதும் ஹரீஷ் பிடித்தாரே ஓட்டம்!

பிருந்தாவனத்துக்குத்தான் ஓடினார் ஹரீஷ். சிறிது காலத்திலேயே அவரது சித்தம் தெளிந்து விட்டது! அம்மாவின் அநுக்கிரகம்தான்! அவருடன் உக்கிரப் போர் செய்யும்போதே கருணையையும் கொட்டியிருக்கிறாள்! அவரது நோயை மிதித்து, அடித்து, அதன் நாவை இழுத்திருக்கிறாள்!

அருமை நிரஞ்ஜன் சந்நியாசக் கோலத்தில் பக்கிரியாக நிற்பதைப் பார்த்து உள்ளம் உருகினாள் அம்மா. உடல் இளைத்து, கந்தல் புடவையைப் பல இடங்களில் முடி போட்டுக் கட்டிக்கொண்டிருந்த அம்மாவைப் பார்த்து நிரஞ்ஜனும் நெஞ்சுருகினார்.

கல்கத்தாவுக்குத் திரும்பிய பின் அம்மாவின் கஷ்டத்தை நிரஞ்ஜன் மற்ற அடியார்களிடம் தெரிவித்தார். பக்தியே உருவான பலராம் பாபுவின் பத்தினி கிருஷ்ண பவானி தேவி கை நிறையப் பணத்துடன் காமார்புகுருக்குச் சென்றாள். சாரதை தோட்டத்தில் மண் வெட்டியும் கையுமாக ஏதோ




**மங்கிய முகத்தில் மகிழ்ச்சி பொங்கிட பாரி மிட்டாய்கள்**

எத்தகைய மன நிலையையும் மாற்றிட வல்லது பாரி மிட்டாய். புதிய, முழுமையான, சுவை மிகுந்தவை பாரி மிட்டாய்கள். அதன் முதல் சுவையே தனி இன்பம்.




பாரிஸ்
கன்பெக்ஷனரி
லிமிடெட்,
சென்னை

**நண்பனும் விரோதியும்**

சோம்பேறித்தனம் மனித குலத்துக்குப் பெரும் விரோதி. சுறுசுறுப்பைப் போன்ற உற்ற தோழன் கிடையாது. அந்தச் சுறுசுறுப்பை வளர்த்துக் கொண்டால் அது உன்னை என்றும் கைவிடாது.

— பருத்ருஹரி

வேலை செய்து கொண்டிருந்தாள். கிருஷ்ண பவானிக்குக் கண்ணீர் முட்டியது. சாரதை காணிக்கையை ஏற்க மாட்டாள் என்று அவளுக்குத் தெரியும். எனவே ''ரகுவீரனுக்கு அர்ப்பணம் பண்ணக் கொண்டு வந்தேன். ரகுவீரன் பிரசாதத்தைக் கொஞ்ச நாள் இங்கே இருந்து சாப்பிட்டுப் போக ஆசை'' என்று நயம்படச் சொல்லி, பண்டங்களை வாங்கிப் போட்டாள் கிருஷ்ணபவானி. மூன்றே நாட்களில் அங்கிருந்து புறப்பட்டாள்.

அம்பிகை கண் திறந்தாள்.

அறுவடையாகி நிறைய நெல் வந்தது சாரதையின் பங்குக்கு. தரித்திரம் விடிந்தது. வேலைக்கு ஒரு பெண்ணை வைத்துக் கொண்டாள் என்றால் பாருங்களேன்! ஸாகரம்மா என்கிற அந்த வேலைக்காரப் பெண் பிற்காலத்தில் அம்மாவின் அன்புள்ளத்தை வாய் கொள்ளாமல் வருணிப்பாள். ''அம்மா என்ன ஆக்கினாலும் எனக்கு வைக்காம இருக்க மாட்டாங்க. நான் வீட்டுக்குள்ளே நுழையறதுக் குள்ளாறயே, 'அடி சாகரம்மா, முதல்லே சாப்பிடு, ஒரு குவளை தண்ணி குடி, களைப்பு தீர்ந்து அப்பாலே வேலை செய்யலாம்'னு வாங்க. துர்க்கா பூஜையின்போது அம்மா வூட்டுலே லெச்சிமி தாண்டவமாடினாளே! என்ன சமையலு, என்ன ருசி! நெதமும் எங்களுக்கெல்லாம் என்னமா வாரித் தந்தாங்க தெரியுமா?'' என்று ஸாகரம்மா சொல்லுவாள்.

அந்த ஆண்டு நவராத்திரியில் துர்கா பூஜை எனப்படும் மூன்று நாட்களைச் சிறப்பாக அன்னதானத்துடன் கொண்டாடினாள் அம்மா. கொடுத்தே பழக்கப்பட்டு, இடைக்காலத்தில் துருப் பிடித்தாற்போல் நொடித்துக் கிடந்த அந்தக் கைக்கு இப்போது மட்டற்ற மகிழ்ச்சி பொங்கியது. அகத்துத் தெய்வமான சீதளாவுக்கே துர்காபூஜை செய்யப்பட்டது. 'சீதளா' என்பது நம் பக்கத்தில் மாரியம்மன் போலாகும். சீதளா தேவி அமிருதத்தை மாவிலையால் தோய்த்து ஊரெங்கும் தெளிப்பது போல் கனவு கண்ட க்ஷுதிராம் (ராமகிருஷ்ணரின் தந்தை) ஒரு ஜல கும்பத்தில் மாவிலையைச் செருகி அதில் சீதளாவைப் பிரதிஷ்டை செய்திருந்தார். புண்ணிய காலங்களில் அந்தத் தீர்த்தத்தை மாற்றுவார்கள். இப்போது துர்கா பூஜையை அந்த சீதளாவுக்குச் செய்தார் சிவராம் — சாரதையின் அருமைப் பிள்ளை 'ஷிபு'.

அந்தணருக்கு அன்னம் பாலித்தாள் சாரதை. ''ஷிபு! நீயே உன் கையாலே இலை போட்டு ஜலம் எடுத்து வை. இலையிலே உப்புக் கல்லும் உன் கையாலே வை. நான் அன்னம் பரிமாறுகிறேன்'' என்றாள் தேவி, அந்தப் பிள்ளைக்கு அந்தணரின் ஆசீர்வாதம் பூரணமாகச் சேர வேண்டும் என்ற ஆசையில்.

ஷிபு அங்கிருந்தவரையில் ரகுவீரனுக்கும் முறைப்படி பூஜை செய்தார். பிறகு வைதிகரை வைத்து அந்தப் பூஜையைத் தொடர்ந்து நடத்தினாள் தேவி.

ஒரு நாள் ராமகிருஷ்ணர் தோன்றி, ''எனக்குக் கிச்சடி பண்ணிப் போடேன்'' என்று கூறி மறைந்தார்.

சாரதைக்கு மேனி புல்லரித்தது. அவளது மாமனாருக்கு ரகுவீரனிடம் அபார பக்தி. ''அவன் அயோத்திக்காரன். வாயு திசை (வட மேற்கு)க்காரானுக்கு இந்த வங்காளத்துச் சாப்பாடு பிடிக்காது. ரகுவீரனுக்குக் கிச்சடிதான் நிவேதனம் பண்ணணும்'' என்பார் க்ஷுதிராம். அதை நினைத்துப் புளகித்தாள் சாரதை. கிச்சடி செய்தாள். ராமகிருஷ்ணரின் புகைப்படத்தை வைத்து அவள் பூஜித்து வந்தாலும் கிச்சடியை ரகுவீரன் முன்னர் கொண்டு வைத்து நமஸ்கரித்தாள். 'ரூபம்தான் வேறே! அவா ரெண்டு பேரும் ஒருத்தர்தான்' என்று சொல்லிக் கொண்டாள்.

அம்மா சிறிது காலம் மகிழ்ச்சியாக இருந்து விட்டாளே! இதோ அதற்கு எதிர்த் திசையில் ஒரு நிகழ்ச்சி:

ஒரிஸ்ஸாவிலிருந்து ஒரு கிழ சந்நியாசி காமார்புகுருக்கு வந்து தங்கியிருந்தார். காமார்புகுரின் செல்வச் செழிப்புள்ள இளவட்டங்களிடையே சிறிது காலமாகக் காலித்தனம் தலை தூக்கியிருந்தது. காரணமேயில்லாமல் அந்த சந்நியாசியைச் சீண்டி இம்சித்தனர் இந்த விடலைகள். அவரும் பாவம், ஊரை விட்டே போய்

விடுவதென்று நிச்சயித்தார். இந்தச் செய்தி காதில் விழுந்ததோ இல்லையோ நம் அம்மா சொல்லொணா வேதனையுற்றாள். தனக்கே உரிய அதிசய எழுச்சியைப் பெற்றாள். ''ஒரு புண்ணியாத்மா நம்ம ஊரை விட்டு மனம் நொந்து போகப்படுமா? அவாவாளும் நம்மாலே முடிஞ்சதைப் போட்டு அவருக்கு ஆசிரமம் கட்டித் தருவோம்'' என்று மக்களைத் தட்டி எழுப்பினாள். ஊரார் சேர்ந்து ஹால்தார்புகுர் என்ற ஏரிக்கருகே புதிய குடில் கட்டலானார்கள்.

வானம் கருந்தகரமாகக் கறுத்து வந்தது. தேவி சாரதை குழந்தை போலக் கைகுவித்தபடி வானத்தை நோக்கி, ''ஸ்வாமீ! கொஞ்சம் பொறுத்துக்கோங்கோ! கொஞ்ச நாழிதான்! இந்தக் கூரையை வேய்ஞ்சுடறோம். அப்புறம் உங்க மனம் கொண்ட மட்டும் கொட்டித் தீர்க்கலாம்'' என்றாள்.

அவள் சொல்லி ஆண்டவன் கேட்காதிருப்பானோ?

மேகம் விலகிற்று. குடில் எழுந்தது. துறவி அதில் வந்து புகுந்தார்.

அவருக்குத் தினமும் அம்மா உணவுப் பண்டங்கள் வழங்கி வந்தாள். காலையும் மாலையும் அங்கு சென்று, ''ஆண்டியப்பா, சௌக்கியமா இருக்கேளா?'' என்று விசாரிப்பாள்.

சில நாட்களிலேயே அவர் மாறாத சௌக்கியமான பரமபதம் அடைந்தார். அதை முன்கூட்டி அறிந்த தேவி அவர் அவ்வூரை விட்டு நீங்காமல் இருத்தி வைத்தாள் போலும்!

தன் வீட்டிலேயே புகுந்து ஹரீஷ் செய்த அட்டூழியமும், ஒரிஸ்ஸா சுவாமிகளுக்குக் காவிப் பசங்கள் இழைத்த அக்கிரமமும் சாரதாவைச் சிந்தாகுலமாக்கின. 'வியாதியையும் வறுமையையும் வதந்திப் பேச்சையும் பற்றிக் கவலையில்லை. இன்று கற்புக்குமா ஆபத்து வந்தது? தனியளாக எப்படிக் காலம் கழிப்பது?' என்று யோசிக்கலானாள் தேவி.

இதே சமயத்தில் கிருஷ்ண பவானி தேவி, கோலாப்மா முதலியோர் முன்னின்று அம்மாவைக் கல்கத்தாவுக்கே அழைப்பதென முடிவு செய்தனர். பலராம் பாபுவின் வீட்டிலேயே அவளுக்கு இருக்கை தர எண்ணினர்.

'அவர் தீர்மானமாகச் சொன்ன வாக்கை மீறிக் காமார்புகுரை விட்டுச் செல்வதா?' என்று குழம்பினாள் தேவி. இச்சடி வேண்டும் என்றால் தரிசனம் தந்த அந்தப் பொல்லாத கணவர் இந்தச் சமயத்தில் எந்த சமிக்ஞையும் தெரிவிக்கவில்லை. 'அவர் எதற்காகக் காமார்புகுரில் அடைந்து கிடக்கச் சொன்னார்?

**பந்தும் களிமண்ணும்**

**நல்ல மனிதன் உயர்ந்த நிலையிலிருந்து கீழே விழுந்துவிடலாம். ஆனால் அவன் விழுவது பந்தைப் போலத்தான். கீழே விழும் பந்து திரும்பவும் மேலே எழவே செய்கிறதல்லவா? அயோக்கியன் விழுந்தால் களிமண்ணைப் போல்தான். மண்ணோடு மண்ணாய்ப் போய்விடுவான்.**

—பருத்ருஹரி

எந்த விவகாரமும் இன்றி பதிவிரதம் பூண்டு ஹரி ஸ்மரணம் செய்வதற்குத் தானே? ஆனால் அதுதான் இங்கே நடக்கவில்லை. ஊர் பாடு எல்லாம் இங்கே வந்து சேருகிறது. தன் பதிவிரதத்துக்கே ஆபத்து வந்துவிடும் போலும் இருக்கிறது. ஹரிஸ்மரணம் செய்வதில் எங்கே தெளிவிருக்கும்? அவர் சொன்ன நோக்கத்துக்காகவே இந்த ஊரை விட்டுப் போனால்தான் நல்லது' என்று முடிவு செய்துவிட்டாள் அம்மா. இருப்பினும் ஊர்ப் பெண்டுகளை அழைத்து ஆலோசனை கலந்தாள். ஸ்ரீ ராமசந்திரன் வானரர்களை ஆலோசனை கலந்தது போல் நம் தேவி உடன் இருப்பவர்களுக்கு மதிப்புத் தந்தாள். அவர்களில் சிலர், ''நன்னாயிருக்கே! உங்களுக்கு என்ன வயசாயிடுத்து? நீங்க கல்கத்தா போனா அந்த சிஷ்யப் பிள்ளைகள் உங்களைச் சுத்தி வரும். அது லட்சணமாயிருக்காது'' என்றனர். காமார்புகுர் பாலைவனத்தில் சாரதைக்கு எப்போதுமே ஒரு நீர்ச் சுனையாக இருந்தவள் பிரஸன்னமயீ. ''நீங்க இந்த ஊரிலே இருந்தா எங்களுக்குப் பாக்கியம்தான். ஆனால் உங்களுக்கு மாளாத இம்சையாகவே இருக்கும். நீங்க கல்கத்தாவுக்கே போயிடறது தான் சரி. வசதியும் நல்ல மனசும் இருக்கிற பக்தாள் கிட்டப் போய் இருங்கோ. அந்த சிஷ்யப் பிள்ளைகள் உங்க வயித்திலே பிறந்த பிள்ளைகளுக்கு மேலே. நீங்க போகத்தான் வேணும் என்கிறதிலே இரண்டாவது அபிப்பிராயத்துக்கு இடமே இல்லை'' என்று பட்டுக் கத்தரித்தது போலச் சொல்லிவிட்டாள் அந்தப் பெருமாட்டி.

பதியின் வாக்கை அதன் எழுத்துப்படி பின்பற்றுவதை விட அதன் கருத்

துப்படி பின்பற்றுவதே விவேகம் என்று அம்மாவும் சமாதானப்படுத்திக் கொண்டாள். சுமார் ஓராண்டு காலம் அவரது கிராமத்தில் அவதிப்பட்ட பின் கல்கத்தாவில் பலராம் பாபுவின் வீட்டுக்குப் பெயர்ந்தாள்.

# 31. "அம்மான்னா அம்மா!"

தொடர்ந்து நின்ற என் தாயானை....
சிந்திக்கப் பெற்றேன் நானே

— அப்பர் சுவாமிகள்

கல்கத்தா வாசியாகி விட்டாள் அம்மா!

ஆனால் கல்கத்தாவின் நாகரிக அற்புதங்கள் ஏதும் தெரியாத கிராமாந்தர அம்மாவாக இருந்தாள். அவளது அப்பாவிக் கண்ணுக்குக் கல்கத்தாவில் சர்வ சகஜமாகிவிட்ட சிறிய விஷயங்கள் கூடப்பெரிய நாகரிக விஞ்ஞான அம்சங்களாகத் தெரிந்தன. நமக்கு ஹாஸ்யமாக இருக்கும்!

ஒரு நாள் கடிகாரம் நின்றுவிட்டது. அப்போது அம்மாவைப் பார்க்க வந்திருந்த ஒரு தனவந்தரின் மாற்றுப் பெண் அதற்குச் சாவி கொடுத்து மறுபடி ஓடவைத்தாள். அம்மா வைத்த கண் வாங்காமல் அந்த அதிசயத்தைப் பார்த்துக்கொண்டேயிருந்தாள். அதற்குப் பின் பல முறை அந்தப் பெண்ணின் புத்திசாலித்தனத்தைப் பற்றிச் சொல்லும்போது, ''அடேயப்பா, அந்தப் பெண்ணுக்குக் கடிகாரத்துக்குச் சாவி கொடுக்கத் தெரியறதுன்னா பாருங்களேன்! இந்தக் காலத்துப் பொம்மனாட்டிகள் என்னவெல்லாம் பண்றா?'' என்று வியந்து கூறுவாள் அம்மா.

அம்மாவுக்கு ஓர் அரிக்கேன் விளக்குக் கொடுக்கப் பட்டிருந்தது. அம்மா அதைப் பொத்திப் பொத்திக் காப்பாற்றி வந்தாள். எனவே சிம்னி உடையாமலே இருந்தது. ஆனால் உள்ளே புகை ஏறிவிட்டதைக் கண்டு, யாரோ, ''என்னம்மா சிம்னியை எடுத்துத் துடைக்கவில்லையா?'' எனக் கேட்டனர்.

''நானா? சிம்னியைக் கழட்டறதா? அச்சச்சோ! அந்த மிஷினைத் தொட்டு, நான் ஒரு அவலப் பொம்மனாட்டி, அதை எப்படி எடுக்கறது?'' என்று வினவினாள் அம்மா.

சிம்னியைப் பொருத்தும் இரண்டு கம்பி வளையங்கள் அரிக்கன் லாந்தரை ஏதுமறியாத அம்மாவின் கண்களில் ஒரு மிஷினாக்கி விட்டது!

ஒரு நாள் குளியலறைக் குழாயை அம்மா திறந்தாள். 'புஸ்'ஸென ஓசை வந்தது. அம்மா வெளியே ஓடி வந்து விட்டாள். ''குழாய்க்குள்ளே எப்படியோ பாம்பு போய்ப் பதுங்கிண்டிருக்கு. நான் திறந்தேனோ இல்லையோ சீற ஆரம்பிச்சுடுத்து'' என்றாள்.

மற்றவர்கள் போய்ப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து விழுந்து விழுந்து சிரித்தார்கள். குழாயிலே காற்று அடைபட்டுப் பிறகு 'புஸ்'ஸென வெளிப்படுவதுண்டு என்று விஷயம் விளக்கப்பட்ட பின் அம்மாவும் சேர்ந்து சிரித்தாள்.

நம்முடைய இந்தப் புத்திசாலி உலகின் புத்திசாலித்தனங்கள் அவளுக்குத் தெரியாவிட்டால் என்ன? அவளுக்குத் தெரிந்த எதுவும் நமக்குத்தான் தெரியவில்லை. நவீன உலகின் அரிச்சுவடியும் தெரியாதிருந்த அதே சமயத்தில் அம்மா ஆத்மிகத்தில் எத்தகைய உச்சிக்குச் சென்றிருந்தாள்! பலராம் பாபுவின் வீட்டு வெளி மாடியிலே தியானம் செய்ய அமர்ந்த மாத்திரத்தி அவளை விட்டு நமது புத்திசாலி உலக அடியோடு சுழன்றுவிடும். எத்தனை எத்தனையோ பௌதிக அதீதமான அதீந்திரியமான, தெய்விக அநுபவங்களைப் பெற்றாள். அநுபவம், அநுபவிப்பவர் என்ற பேதமும் அற்ற சமாதியும் பன்முறை கூடியதுண்டு.

ஒரு நாள் தியானம் கலைந்த பின் அவள் யோகின்–மாவிடம் சொன்னாள்: ''இன்னிக்கு எனக்கு ஒரு காட்சி. நான் ஏதோ தூர தேசத்திலே இருக்கேன். அந்தத் தேசத்துக்காரான் என்னை ரொம்ப அன்போடே நடத்தறா. நான் ரொம்ப அழகா ஆயிடறேன். டாகூரும் அங்கே வரார். அவா பிரியமாக என்னை டாகூர் பக்கத்திலே உட்கார்த்தி வைக்கறா. எனக்கு அப்போ ஏற்பட்ட ஆனந்தத்தை வாய் விட்டுச் சொல்ல வராது. அப்புறம் இகலோக ஸ்மரணை வந்தது. என்னோட இந்த அமங்கல சரீரத்தைப் பார்க்கிறேன். 'இந்த அசங்கியமான சரீரத்துக்குள்ளே ஏன் மறுபடி நுழையணும்? வேண்டாம்'னு நினைக்கிறேன். ஆனா, ஏனோ தெரியலை, எப்படியோ சமாளிச்சுண்டு இதுக்குள்ளேயே மறுபடி வந்து புகுந்துக்கறேன்.'

தன் குழந்தைகளை வாழ்விக்கத்தான் அப்படி வந்து புகுந்து கொண்டாள்! வேறென்ன காரணம் கூற முடியும்?

(தொடரும்)

# இளைஞர் சமுதாயம்



இ. ஆர். கோபாலகிருஷ்ணன்
விவேகானந்தர் கல்லூரி
('தேன் மழை' சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றவர்.)

## 4. சர்க்கரைப் பந்தலிலே..

இப்பொழுது பொதுவாக எங்கு பார்த்தாலும் மாணவர் அமைதியின்மை சர்வ சாதாரணமாகி விட்டது. ''....சர்வ கலாசாலையில் மாணவர்கள் துணைவேந்தரை 'கேரோ' செய்தனர்.'' ''ஒரு மாணவனை ஓர் உபாத்தியாயர் இழிவாகப் பேசிவிட்டதால் மாணவர்கள் வகுப்புக்குப் போக மறுத்தனர்'' ''முதல்வர் தம் செயலுக்கு மன்னிப்புக் கோரும் வரையில் மாணவர்கள் தங்கள் வேலை நிறுத்தத்தை நீடித்தனர்'' என்றெல்லாம் பத்திரிகைகளில் செய்திகள் காண்பது இப்பொழுது அதிசயமாயில்லை.

ஏன் இந்த இளைஞர்கள் வர வர எல்லாருக்கும் ஒரு பிரச்னையாக மாறி வருகின்றனர் ?

அமைதியின்மைக்கு முக்கிய காரணம் படித்தவர்களின் வேலையில்லாத் திண்டாட்டம்தான். குறிக்கோளில்லாத படிப்பு, படித்தாலும் வேலை கிடைக்காது என்ற உறுதி, படித்துப் பட்டம் பெற்ற வாலிபன் தன் குடும்பத்துக்கு ஒரு பாரமாகக் கருதப்படும் ஒரு துர்ப்பாக்கிய நிலை எல்லாமாகச் சேர்ந்து இளைஞர் சமுதாயத்தை ஒரு குழப்ப நிலைக்கு ஆளாக்கிவிட்டது; அவர்களைப் பொறுப்பற்ற செயல்களைச் செய்யத் தூண்டியும் வருகிறது. இவ்வித சங்கடமான சூழ்நிலையில், இளைஞர்களின் எதிர்ப்பு ஆர்வத்தைப் பயன்படுத்திக் கொண்டு தங்கள் நலன்களை வளர்த்துக் கொள்ளும் அரசியல் வாதிகள் வேறு குறுக்கிட்டு மேலும் குழப்பம் விளைவிக்கின்றனர்.

மேலும் மாறிவரும் இன்றையத் தலைமுறையினருக்கும், மாற்றத்தை விரும்பாத பழைய தலைமுறையினருக்கும் இடையே இடைவெளி பெருகிவருகின்றது. இது 'தலைமுறை இடைவெளி' (Generation gap) எனப்படுகிறது.

இளைஞர் சமுதாயத்தின் பிரச்னைகளைப் பெரியவர்கள் பரிவுடன் கவனித்துப் பார்க்க வேண்டும். பெரியவர்கள் தங்களுடைய மரபுகளையும், அபிப்பிராயங்களையும் இன்றைய இளைஞர்கள் மீது திணிக்க முயலாமல், அவர்களுடைய உள்ளக் குமுறலையும், கொதிப்பையும் அறிந்து அவற்றைத் தீர்க்க ஆவன செய்ய வேண்டும்.

(இந்த என்னுடைய சொல் முழக்கத்தை, பெரியவர்களுக்குக் கொடுத்திருக்கும் வினா சில இளைஞர் சமுதாயம் வரவேற்கும் என்று நம்புகிறேன்! இதை எழுதும் நானும் ஒரு பெரியவன், பெற்றோன் என்று நான் சிறிதும் அஞ்சவில்லை. என் அஞ்சா நெஞ்சம் வாழ்க !)

''தேன்மழை'' மாணவ, மாணவியரால் நடத்தப்படும் மாதப் பத்திரிகை. நுங்கம்பாக்கத்தில் உள்ள அதன் காரியாலயத்துக்குப் போனதன் விளைவுதான் என்னுடைய மேற்கூறிய சொல் முழக்கம். துடிப்பான சில மாணவர்கள் சேர்ந்து இந்தப் பத்திரிகையை நடத்துகின்றனர். 1–12–70லிருந்து இந்தப் பத்திரிகை வெளிவருகிறது. மாணவர்கள் நலனைக் காக்க, இளைஞர் சமுதாயத்துக்கு விழிப்பு ஊட்ட, ஒரு நல்லெண்ணத் தூதுவனாக விளங்குகிறது இப்பத்திரிகை.

''தேன் மழை'' காரியாலயம் ஒரு சின்ன அறையில் இயங்கி வருகிறது. '' 'தேன் மழை'க்கு இந்தச் சின்ன அறை போதுமா என்று யோசிக்கிறீர்களா?'' என்றார் ஆசிரியர் குழுவைச் சேர்ந்த ஒரு மாணவர்.

''இந்தச் சின்ன அறையில் தேன் மழை பெய்தாலே பெரிய காரியமாயிற்றே !'' என்றேன் நான்.

இன்னொரு மாணவர் என் எதிரே ஒரு புள்ளி விவரத்தை எடுத்துப் போட்டார்.

**இன்றைய இந்தியா**

1. வேலையற்றோர் 30,000,000 பேர்
2. கல்வியறிவற்றோர் 386,000,000 பேர்

'தேன் மழை' மாணவர்கள் ஒன்று கூடி ஆலோசனை நடத்துகின்றனர்.





கிரிக்கெட் பந்துவீச்சு நிபுணர் வேங்கட ராகவனுடன் மாணவர் பேட்டி.

3. நாளொன்றுக்கு
ஐம்பது பைசாவுக்
குக் குறைந்த வரு
மானம் பெறுவோர் 185,600,000 பேர்

இதைப் பார்த்துச் சிறிது நேரம் திகைத்துப் போனேன்.

''என்ன ஸார், இதற்குத் தீர்வு காண என்ன யோசனை கூறுகிறீர்கள்?'' என்று ஒரு மாணவர் என்னைத் தட்டிக் கேட்டார். நான் கொஞ்சம் தடுமாறித்தான் போய்விட்டேன். மாணவர்களை நான் பேட்டி காண வந்தேனா? இல்லை, மாணவர்கள் என்னைப் பேட்டி காண்கிறார்களா? ஒரு வேளை வகுப்பில் பேராசிரியர்கள் மாணவர்களைக் கேள்விகள் கேட்பதனால் பதிலுக்கு என்னை இப்போது பழி வாங்குகிறார்களா?

'' பெரிய தலைவர்களே பதில் தெரியாமல் குழம்பிக் கொண்டிருக்கும் இந்தப் புள்ளி விவரங்களுக்கு நான் மட்டும் பதில் கூறிவிட முடியுமா? சட்டென்று தீர்வு காணக்கூடிய விஷயங்களா இவை? அது இருக்கட்டும். உங்களுடைய இந்தப் புள்ளிவிவரம் சம்பந்தமாக ஏதாவது உருப்படியான யோசனைகள் வைத்திருக்கிறீர்களா?'' என்று கேட்டேன். (விவாதத்தின் சிக்கலான கட்டத்தில் நழுவிக் கொள்ளுவதற்குச் சுலபமான, புத்திசாலித்தனமான வழி கேள்விக்கு மறு கேள்வி எழுப்புவதுதான் என்பதை உங்களுக்குச் சொல்லி வைக்கிறேன்!)

''இது துரிதமாகத் தீர்வு காணக்கூடிய விஷயமல்ல. அதற்குப் பெரியவர்கள் மட்டும் அல்ல; அரசு மட்டும் அல்ல; இளைஞர்களும் தங்கள் மாணவப் பருவத்திலிருந்தே மன மாற்றத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். 'படிக்கும் போதே சம்பாதியுங்கள்' என்ற ஓர் இயக்கத்தைத் ''தேன் மழை''யில் தொடங்கி யிருக்கிறோம். பயிலும்போதே பணம் சம்பாதிக்க விரும்புகிறவர்கள் ''தேன் மழை'' அலுவலகத்துடன் தொடர்பு கொண்டால் அதற்கான எளிய பல தொழிற் பயிற்சிகளை நாங்கள் ஏற்பாடு செய்து கொடுக்கிறோம். ஆனால் அவர்களுக்கு ஒரு நிபந்தனை. திறமையாய்ப் பேசத் தெரிந்தவர்களாயிருக்க வேண்டும். பத்திரிகை நடத்த, விற்பனையை அதிகரிக்கச் செய்ய, விளம்பரம் சேகரிக்க—ஆகியவற்றுக்கெல்லாம் பயிற்சித் திட்டங்கள் வைத்திருக்கிறோம்.''

''நல்லது. இப்பொழுது படிப்புக்கும், வேலை வாய்ப்புக்கும் சம்பந்தம் இல்லாமல் இருக்கிறதே! இதற்கு என்ன செய்யலாம்? நம் நாட்டையும் வளமுள்ள நாடாக்க என்ன செய்யலாம்? அதற்கு என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''ஸார்! நான் சொல்லுகிறேனே என்று நீங்கள் கோபித்துக் கொள்ளக் கூடாது. நாம் கையிலே வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைகிறோம். பானையில் நிறைய அரிசியை வைத்துக் கொண்டு சோற்றுக்குத் திண்டாடுகிறோம். நம் நாட்டில் படித்தவர்கள் தொகை மிகவும் குறைவுதான். ஆனால் அவர்களுடைய மொத்த எண்ணிக்கை வளர்ந்துவிட்ட செல்வ நாடுகளில் உள்ள படித்தவர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும் அதிகம்! நம் நாடு பூத்துக் குலுங்க வேண்டுமெனில், செல்வச் செழிப்பில் மலர வேண்டுமெனில், அதற்கான தீர்வு இளைஞர் சமுதாயத்திடம்தான் இருக்கிறது'' என்று வீராவேசமாகப் பேசினார் அம்மாணவர்.

''அதற்கு என்ன செய்யலாம் என்கிறீர்கள்?'' என்ற ஒரு கேள்வியைப் போட்டு அம்மாணவரது ஆவேசத்தை மேலும் தூண்டி விட்டேன்.

''என்ன செய்யலாம், என்று கேட்கிறீர்கள்? உழைக்க வேண்டும், ஸார்! உழைக்க வேண்டும். படித்த மாணவர்கள் அனைவரும் குமாஸ்தாக்களாகும் கொடுமை ஒழிய வேண்டும். படித்துப் பட்டம் பெற்றால் நகத்தில் அழுக்குப்படாமல், மினுக்காக டிரஸ் செய்து கொண்டு உத்தியோகம் பார்க்கலாம் என்னும் எண்ணம் ஒழிய வேண்டும். இதற்கு ஒரே வழி இந்நாட்டில் படிப்பதை, பட்டம் பெறுவதைத் தடுக்க ஒரு சட்டம் வரவேண்டும். வயலில் உழும் விவசாயி தன் மகனைப் படிக்க வைக்க நிலங்களை விற்றுவிட்டு மாநகர்நோக்கி வருகிறான். மகனைக் குமாஸ்தாவாக்குகிறான். தன் மகனைப் படிக்க வைப்பதற்காகப் புளகாங்கிதம் அடைகிறான். ஆனால் அதே மகனை அவன் படித்தபின் நவீன முறை விவசாயத்தில் ஈடுபடச் செய்திருப்பானானால் அவனை மெச்சலாம்; அல்லது மக்களுக்குத் தேவையான ஒரு பொருளை உற்பத்தி செய்யத் தன் நிலத்தில் ஒரு தொழிற்சாலை அமைத்திருப்பானானால் அவனைப் பாராட்டலாம். ஆனால் அவன் தன் மகனை ஒரு குமாஸ்தாவாகத்தான் ஆக்கியிருக்கிறான்!''

இந்தப் புரட்சிகரமான பேச்சைக் கேட்டதும் நான் அயர்ந்துதான் போனேன். இளம் உள்ளங்களில்தான் எத்தனை குமுறல்கள்!

பிறகு மாணவர்கள் கொடுத்த சில தகவல்களை உங்களுக்குத் தருகிறேன்.

சமீபத்தில், பல்கலைக் கழக மாணவர் குழு ஒன்று சென்னையில் உள்ள குடிசைக் குடியிருப்புக்கள் சிலவற்றுக்குச் சென்று மாதிரிக் கணக்கெடுப்பு ஒன்று நடத்தியது. மாத வருமானம் நூறு ரூபாய் பெறும் குடும்பம் ஒன்றில் குடும்ப அங்கத்தினர் ஐவர். இம் மக்கள் அடகுக் கடையில் தங்களிடமுள்ள பொருள்

களை அதிக வட்டிக்கு வைத்துக் கடன் வாங்குகின்றனர். வட்டி கட்டியே இவர்கள் ஓய்ந்து விடுகின்றனர். முதலுக்கு மேல் வட்டி செலுத்திப் படுநஷ்டத்துக்கு ஆளாகும் குடும்பங்கள் ஏராளம்.

மாணவர்கள் நடத்திய கணக்கெடுப்பில் எண்பத்திரண்டு சதவீதம் மக்கள், தங்கள் உணவுக்கென்றுதான் கடன் வாங்குகிறார்கள் என்பது புலனாயிற்று. சென்னையின் மொத்த மக்கள் தொகையில் 43 சதவிகிதம் பேர்கள் குடிசையில் வாழ்வோர். அவர்களில் 98 சதவிகிதம்பேர்கள் இங்ஙனம் படுமோசமான நிலையில் கடன்பட்டு அல்லற்படுகின்றனர்.

அம்மாணவர் மேலும் ஆவேசத்தோடு தொடர்ந்தார்:

''இன்னும் கேளுங்கள் ஸார்! இவ்விதம் ஏழைகளைக் கொடுமைப்படுத்தி, வறுமைக்கு ஆளாக்கி ஈட்டும் பணத்தை, கடன் கொடுப்பவர்கள் என்ன செய்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? இப்பணத்தை வியாபாரத்தில் முதலீடு செய்கின்றனர். சென்னையில் நடைபெறும் வியாபாரத்தில் ஒரு பங்கு—ஆதரவற்ற ஏழை மக்களிடமிருந்து அநியாயமாக, கொடூரமாக அபகரிக்கப்பட்ட பணத்தின் மூலம் நடைபெறுகிறது. மாணவர்களாகிய நாங்கள் சில பெரியவர்களை அணுகி இது விஷயமாக யோசனை கேட்டபோது, 'இது தீராத பிரச்னை; தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வரும் பிரச்னை. இதைத் தீர்க்க முயல்வது பயனற்றது' என்று கூறி அவர்கள் தங்கள் பொறுப்பைக் கைகழுவி விட்டனர். இது எத்தனை பெரிய அநீதி! சமுதாயத்தில் ஒரு பகுதியினர் கடன் தொல்லையினால் சசக்கிப் பிழியப்பட்டுக் கொடுமைப்படுத்தப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்கும் மற்றொரு சமுதாயம் இருப்பது அவசியம்தானா? இக்கொடுமையைப் பார்த்துக் கொண்டு மௌனமாயிருப்பது மிகப் பெரிய பாவம்! அநீதி! அக்கிரமம்!''

மேற்படி மாணவர் குழு மற்ற மக்களுடன் சேர்ந்து இயன்றவரையில் அப்பாமர மக்களுக்குக் கடன் கொடுமையிலிருந்து நிவாரணம் அளிப்பதெனத் தீர்மானித்திருக்கிறது. இம்முயற்சியில் அவர்களுக்கு உதவ முன்வருவோரை மாணவர் குழு பெரு மகிழ்ச்சியுடன் வரவேற்கிறது.

''தேன்மழை'' பத்திரிகையில் சிறுகதைப் போட்டி, கவிதைப் போட்டி, கட்டுரைப் போட்டி, நகைச்சுவைப் போட்டி முதலிய இலக்கியப் போட்டிகளை நடத்தி இளைஞர் சமுதாயத்தில் இலக்கிய உணர்வை, ஆர்வத்தை வளர்த்து வருகிறார்கள்.

வெள்ளப் பெருக்கால் பாதிக்கப்பட்ட ஒரிஸ்ஸா மக்களுக்கு நிவாரணப் பணி புரிய மாணவ, மாணவிகளையனுப்பி ஒரிஸ்ஸாவில் குறைந்தது இரண்டு மாதங்கள் தங்கிப் பணியாற்ற ஏற்பாடு செய்திருக்கின்றனர். போய் வருவதற்கான ரயில் செலவு, உறையுள், உணவு போன்றவற்றைச் ''சமுதாயப் பணி மாணவர் குழு'' வழங்குகிறது.

புதிதாக ஒரு சோதனை முயற்சியும் தொடங்கியிருக்கிறார்கள். அதன்படி மாணவர்கள் பலர் கிராமங்களில் ஓர் ஆண்டு தங்கி, அந்தக் கிராம மக்களுடன் நெருங்கிப் பழக வேண்டும். அப்போதுதான் கிராம மக்களைப் பற்றி அறிந்து கொள்ள நல்ல வாய்ப்பு ஏற்படும். அதுமட்டுமல்லாமல், அந்த ஓர் ஆண்டு காலத்துக்குள் அக் கிராமத்தை முன்னேற்றம் அடையச் செய்தல், அறியாமையைக் களைதல், தாழ்வு மனப்பான்மையை நீக்குதல், பள்ளிகள் அமைக்க ஊக்குதல், போன்ற பணிகளில் மாணவர்கள் ஈடுபடுதல் வேண்டும். இந்தப் பணிக்கு ஆதரவு தரும் மாணவர்களை, ''தேன்மழை'' 'வருக, வருக' என்று கரம் நீட்டி வரவேற்கிறது.

''தேன்மழை'' செய்யும் சேவை பாராட்டுக்குரியது. கதை, கவிதை, கட்டுரை, தலையங்கம், துணுக்குகள் எல்லாம் மாணவர்களாலேயே எழுதப்பட்டு, பத்திரிகை மிகவும் சுவையாக வெளிவருகிறது.

தேன்மழையில் நனையும் சர்க்கரைப் பந்தலாக இளைஞர் சமுதாயம் மாறிவிட வேண்டும் என்பதுதான் நம் விருப்பம். அதற்கான அறிகுறிகள் காணப்படுகின்றன.

—லேமாஸ்

## பறவைகள் கூட்டுறவுக் கழகம்



தென் ஆப்பிரிக்காவில் வாழும் ஒரினத்துத் தூக்கணாங் குருவிகள், மற்றப் பறவைகளைப் போல், தனித் தனியாகக் கூடு கட்டி வாழ்வதில்லை. இக்காலத்தில், ஒரு பெரிய கட்டடத்தில் பல குடும்பங்கள் தனித் தனி பகுதிகளில் வசிப்பதைப் போல, இவையும் 'ஃப்ளாட்' (Flat) முறையை அநுசரிக்கின்றன! முப்பது நாற்பது ஜோடிக் குருவிகள் ஒன்று கூடிக் கூட்டுறவு முறையில் பெரியதொரு 'சமுதாயக் கூடு' அமைக்கின்றன. வீடு கட்டப் பொருள்களைச் சேகரிப்பதிலோ, மற்ற வேலைகளைச் செய்வதிலோ எள்ளளவு சச்சரவு இன்றி ஒவ்வொரு குருவியும் ஒத்துழைக்கிறது. வீடு கட்டி முடிந்தபின், அதன் தட்டையான அடிப் பாகத்தில் துளையிட்டு ஒவ்வொரு ஜோடியும் அதனதன் உபயோகத்துக்காக வசதியான தனி அறை அமைத்துக் கொண்டு குடும்ப வாழ்க்கை நடத்தத் தொடங்குகிறது. இவ்வாறு 'ஒண்டிக் குடித்தனம்' நடத்துவதில் இவற்றுக்கு என்ன விசேஷ லாபம் என்று தெரியவில்லை.

-பத்மா ராஜகோபால்

ULKA CTP-34 Tam

# அந்த நாள் ஒய்யாரம் குடும்பத்துக்கு கொண்டு தந்தது எதுவோ?




## அதுவோ பினகா!

## அதன் புதிய ஸாண்டல்வுட் டால்க்மூலம்



பினகா, சந்தனத்தின் சாறெடுத்து,
சத்தெடுத்து, சருமப் பராமரிப்பு
சாதனம் கலந்தெடுத்து படைத்துள்ளது.
அழகு வண்ணப் பெட்டியினில் அடைத்து
அளித்துள்ளது. அந்நாள் ஒய்யாரத்
தன்னில், குடும்பத்தினரைக் கொலுவேற்ற,
சந்தன மயமான புதிய பாதை—இன்றே
ஒரு புதிய பினகா ஸாண்டல் வுட்
டால்க டின் வாங்கி அளிப்பீர்.

நாட்டம் அவர்க்கு சந்தனத்தில்
இல்லை எனில், நாடிப் பெறுவீர்
பினகா ரோஸ் டால்க்

**பினகா**

டால்க்—குடும்பம் முழுக்க விரும்பும்

CIBA Cosmetics



# வீடு பெறநில்!

## என். விசுவநாதன்

(மாலை நேரம். ஆபீஸிலிருந்து திரும்பிவிட்ட குமார், மனைவி மீராவின் வருகைக்காகக் காத்திருக்கிறான். தானே ஒரு கப் காப்பி போட்டுக் கொண்டு திரும்பும்பொழுது மீரா வருகிறாள்.)

குமார்: என்ன மீரா, 'ஓவர்டைமா' இன்றைக்கு? மணி ஏழு அடிக்கப் போகிறதே !

மீரா: இல்லையே, பஸ் பிடித்து வருவதற்குள் உன் பாடு என் பாடு ஆகிவிடுகிறது. கொஞ்ச தூரத்திலா இருக்கிறது ஆபீஸ் ? மயிலாப்பூர் எங்கே ? மாதவரம் எங்கே ? உங்களுக்குப் பரவாயில்லை.

குமார்: சரி அதை விடு. ஊரிலிருந்து பங்கஜம் அத்தை வருகிறாளாம். கூடவே ரேவதி, பாபு இரண்டு பேரும் வருகிறார்களாம்.

மீரா: எப்போது வருகிறார்களாம்? இந்த மாசமேவா ?

குமார் : இல்லை, இன்னும் இரண்டு வாரங்கள் கழித்து. ஏன்?

மீரா: நல்ல காலம். கொஞ்சம் மூச்சுவிட அவகாசம் கிடைத்தது. நீங்கள் சொல்லுங்கள்: இரண்டு வாரங்கள் போதாது, ஒரு புது வீடு பார்த்துக் குடி போக?

குமார்: இரும்பவும் பழைய பல்லவியை ஆரம்பித்துவிட்டாய் போலிருக்கிறது. ஏன், இந்த இடத்துக்கு என்ன குறைச்சல்? நாம் இரண்டே பேர். குறைந்த வாடகை. இந்த வாடகைக்கு இதைவிட நல்ல இடம் கிடைக்காது, மீரா.

மீரா: ஐயோ, வாடகையை விடுங்கள். நாம் இரண்டே பேர்தான். இல்லையென்று சொல்லவில்லை. அதற்கென்று நாலு பேர் வந்தால் போனால்கூட ஒதுங்க இடம் இல்லாமல் என்ன வீடு இது! இதோ பாருங்கள். இரண்டு பேரும்தான் சம்பாதிக்கிறோம். இன்னும் முப்பதோ நாற்பதோ அதிகமானாலும் ஒரு நல்ல வீடாகப் பாருங்கள். பங்கஜம் அத்தை வருவதற்குள் பார்த்து வைத்தால் இன்னும் நல்லது.

குமார்: இரண்டு பேரும் சம்பாதிக்கிறோம். வாஸ்தவம்தான். செலவைக் கவனித்தாயா?

மீரா: செலவு யாருக்குத்தான் இல்லை? அதற்கென்று காலை நீட்டிப் படுக்கக்கூட இடமில்லாமல் இப்படி இடுமுடுக்கில் இருந்து குடித்தனம் செய்ய என்ன தலையெழுத்து பாருங்கள் !

குமார்: நான்தான் சொன்னேனே, என் தங்கை கல்யாணக் கடன் அடைகிறவரையில் கொஞ்சம் சிரமம் இருக்கும் என்றேன். சரி என்றாய். இப்போது முப்பது நாற்பது ரூபாய் அதிகம் கொடுத்து வேறு வீட்டுக்குப் போனால் மின்சாரம், அது இது என்று இன்னும் பத்து ரூபாய் கூடவே ஆகும்.

மீரா: சரி விடுங்கள். இந்த வீடு மாற்றுகிற பேச்சு வந்தால் உங்களுக்கு என்னவோ ரொம்பச் சங்கடமாக இருக்கிறது. காப்பி போடப் போகிறேன் எனக்கு. இன்னொரு டோஸ் காப்பி வேணுமா உங்களுக்கு?

குமார்: நீதான் எனக்கு இப்போது நன்றாக டோஸ் விட்டுவிட்டாயே! இனிமேல் எதற்கு?

(இருவரும் சிரிக்கிறார்கள்.)

2

(ஒரு ஞாயிற்றுக்கிழமை, முற்பகல் வேளை. பங்கஜம் அத்தை ஒரு பெரிய பிளாஸ்டிக் வாளியில், துவைத்த துணிகளையெல்லாம் வைத்துக்கொண்டு உலர்த்த இடம் தேடுகிறாள்.)

அத்தை: மீரா! இவற்றையெல்லாம் எங்கே கொண்டுபோய் உலர்த்துவது? உள்ளே இருக்கிற கொடியில் குமாரின் வேஷ்டி, உன் புடவை, டவல் எல்லாம் போட்டிருக்கிறதே !

மீரா: இங்கே கொடுங்கள் அத்தை! நான் பார்த்து உலர்த்திக் கொள்கிறேன்.

அத்தை: நீயும்தான் எங்கே போடுவாய், இதையெல்லாம் ?

மீரா: வீட்டுக்காரர்களிடம் சொல்லி மொட்டை மாடியில் ஒரு கயிற்றைக் கட்டிப் போடுகிறேன் !

(வாளியை எடுத்துக்கொண்டு போனவன், துணியை உலர்த்திவிட்டு, முகம் கருக்கத் திரும்பி வருகிறான்.)

அத்தை: என்ன, உலர்த்தியாயிற்று? (மீராவின் முக மாறுதலைக் கவனித்துவிட்டு) அவர்கள் ஏதேனும் சொன்னார்களா மீரா?

மீரா: மாடியில் குழந்தைகள் பட்டம் விடப்போகிறார்களாம். அவர்களுக்கு நாம் குறுக்கும் நெடுக்கும் கொடி கட்டிவிட்டால் இடைஞ்சலாக




இருக்குமாம். இன்றைக்கு மாத்திரம் போட்டுக்கொள்ளச் சொன்னார்கள்...

அத்தை: நல்ல வீடு, நல்ல வீட்டுக்காரர்கள் போ! ஏண்டா, குமார்...

குமார்: என்ன அத்தை?

அத்தை: ஏண்டா, இன்னும் இரண்டு அறைகளும், கொல்லையோ வாசலோ உள்ள இடமும் இல்லாமலா போயிற்று, இத்தனை பெரிய பட்டணத்தில்?

குமார்: பட்டணம் என்னவோ பெரிதுதான் அத்தை. இன்னும் இரண்டு அறைகளும் ஒரு காம்பவுண்டும் உள்ள இடம் என்றால் இங்கேயெல்லாம் இருநூறு முந்நூறு ரூபாய் ஆகும். உனக்குத் தெரியாது.

அத்தை: ஒரேயடியாகப் பங்களாமாதிரி இல்லாவிட்டாலும் வசதி வேண்டாமாடா?

மீரா: அதைச் சொல்லுங்கள் அத்தை. நான் எத்தனை நாட்கள் இவரிடம் கெஞ்சியிருப்பேன், கேளுங்கள்.

குமார்: ஹ்ம்... உனக்கு நல்ல பக்கபலம் கிடைத்துவிட்டது.

அத்தை: பக்கபலம் என்னடா இதிலே? அவள் சொல்றதும் நியாயம்தானே? இன்றைக்கு என்னவோ நீங்கள் இரண்டே பேர்தான். நாளைக்கே உங்களுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்ததுகளானாலும் என்ன பண்ணுவீர்கள் இடத்துக்கு.....?

(மீரா வெட்கத்துடன் திரும்பிக் கொள்ள, குமார் கலகலவென்று சிரிக்கிறான்.)

குமார்: ரொம்பப் பயமுறுத்தாதே அத்தை!

அத்தை: இல்லேடா... ஒரு அவுட் ஹவுஸ் பாரேன். வாடகையும் குறைவாயிருக்கும். சுற்றுப்புற இடமும் இருக்கும். இப்போது பார், ரேவதியும் பாபுவும் நடு ரோட்டில் விளையாடப் போய்விட்டார்கள்....

குமார்: ஐயையோ, காரும் ஸ்கூட்டருமாக ஓடுமே....

(பாய்ந்து செல்கிறான்.)

மீரா: நீங்கள் இங்கிருந்து போவதற்குள் அவரிடம் சொல்லி, அவர் மனசை மாற்ற வேண்டும் அத்தை. இந்த இரண்டு அறைகளுக்குள் அடைந்து கிடந்து அலுத்துப் போய்விட்டது.

குமார் (ரேவதியைத் தூக்கி வந்தபடி): மீரா, அங்கே காரம் போர்டுக்குப் பக்கத்தில் பவுடர் வைத்திருந்தேன் பார். கொஞ்சம் எடு.

அத்தை (பதறிக் கொண்டு): என்ன ஆயிற்று, என் ரேவதிக் கண்ணுக்கு?

குமார்: ஒன்றும் ஆகவில்லை அத்தை..... வேகமாக வந்த ஒரு சைக்கிள் குழந்தை மேலே இடித்து விட்டது.

மீரா: ரத்தம் ஒன்றும் வரவில்லையே?

குமார்: நோ... நோ... சின்னக் காயம் தான். பயப்படாதே..... அத்தை...

மீரா: அப்பாடா, நல்ல வேளை!

## 3

(ஒரு மாதத்துக்குப் பிறகு. ஒரு சனிக்கிழமை மாலை. பிற்பகலிலேயே ஆபீஸிலிருந்து வந்துவிட்ட மீரா, வீட்டை ஒழுங்குபடுத்துவதில் மும்முரமாயிருக்கிறாள். தூசி தட்டி, ஜன்னல்கள், கதவுகள், மின் விசிறி எல்லாம் துடைத்து விட்டு, வியர்வை ஒழுக, தலையை முடிந்து கொண்டு வாசலுக்கு வருகிறாள். தற்செயலாக அந்தப் பக்கம் வந்த அவள் ஆபீஸ் மானேஜர் பிரபாகர் பார்த்துவிடுகிறார்.)

பிரபாகர்: மிஸஸ் மீரா! நீங்கள் இங்கேயா இருக்கிறீர்கள்?

மீரா (திகைப்பை வெளிக் காட்டாமல்): ஆமாம்... ஆமாம் சார்! எங்கே இப்படி?

பிரபாகர்: ஒரு ஸூட்கேஸ் ரிப்பேருக்குக் கொடுத்திருந்தேன். வாங்கிக் கொண்டு போக வந்தேன். நீங்கள் இங்கே இருப்பது எனக்குத் தெரியாதே!

மீரா: உள்ளே வாருங்கள் சார். அவரும் வருகிற நேரம்தான்.

பிரபாகர்: ஓ, உங்கள் கணவரா? எங்கே அவருக்கு உத்தியோகம்?

மீரா: சர்க்கார் உத்தியோகம், சார். (ஒரு ஸ்டீல் நாற்காலியை எடுத்துப் போடுகிறாள்) ரொம்பச் சின்ன வீடுதான் சார்....

பிரபாகர்: அதனாலென்ன, அழகாக வைத்திருக்கிறீர்கள்.....

மீரா: இப்போதுதான் எல்லாம் ஒழுங்கு பண்ணிக் கொண்டிருந்தேன். (தன் தலைமயிரை ஒதுக்கிவிட்டுக் கொண்டு, புடவையிலிருந்த தூசியை மெல்லத் தட்டுகிறாள்) காப்பி கொண்டு வருகிறேன் சார்.

பிரபாகர்: நோ... நோ... டோண்ட் பாதர்.... இந்த இடம் சௌகரியமாயிருக்கிறதா உங்களுக்கு?

மீரா: கொஞ்சம் அசௌகரியம்தான் சார். ஆனால் இரண்டு பேர்தானே.... நானும் அவரிடம் சொல்லிக் கொண்டே வருகிறேன், கொஞ்சம் விஸ்தாரமான ஒரு வீடு பார்க்க.

பிர: அவர் வர நேரமாகும் போலிருக்கிறதே, நான் வரட்டுமாம்மா? நானெக்கு 'டூர்' வேறு போக வேண்டும்!

(எழும்புகிறார்.)

மீரா: என்ன சார் இது, காப்பிகூடச் சாப்பிடாமல்!

பிரபாகர்: பரவாயில்லே! இன்னொரு நாள் ஆகட்டுமே. ஓகே?

(வெளியே நிறுத்தியிருக்கும் தம் காரை நோக்கி நடக்கிறார்.)

மீரா: சரி சார்.

(உள்ளே திரும்பிப் போய் அப்படியே கால்மடக்கிக் கொண்டு கட்டிலில் உட்கார்ந்து விடுகிறாள் மீரா.)

குமார் (வந்து கொண்டே): என்ன மீரா, உடம்பு சரியில்லையா என்ன? விளக்கைக் கூடப் போடாமல்....?

மீரா: ம்... ம்...

குமார்: என்ன இது, தலையெல்லாம் கலைந்து ஒரே ஒட்டடையும் தூசியுமாய்? ஓகோ! க்ளீனிங் ஆபரேஷனா? பரவாயில்லை. நீங்களெல்லாம் கம்பெனி உத்தியோகஸ்தர்கள். சனிக்கிழமை அரை நாள் ஓட்டி விட்டால் அப்புறம் ஒன்றரை நாள் லீவு. பொழுதை எப்படி ஓட்டுவது என்று தெரியாமல் தவிப்பீர்கள். தம் மாதிரியா....? என்ன மீரா, நான் பேசிக்கொண்டே இருக்கிறேன். நீபாட்டுக்குச் சும்மா இருக்கிறாயே? உடம்புக்கு ஏதாவது?

(கிட்டே வந்து நெற்றியில் கையை வைத்துப் பார்க்கிறான்.)

மீரா (பட்டென்று அவன் கையை விலக்கி): உடம்புக்கு ஒன்றும் இல்லை. மனசுதான் சரியில்லை.

குமார்: உடம்பு சரியில்லை என்றால் டாக்டரிடம் போகலாம். மனசு சரியில்லை என்றால் யாரிடம் போவது?

மீரா (குரலில் வெறுப்பும் கோபமும் வெளிப்பட): யாரிடமும் போக வேண்டாம்.

குமார்: ஓகோ, எனக்குப் புரிகிறது. யாராவது வந்து உன் வீட்டைப் பார்த்து ஏதாவது சொல்லியிருப்பார்கள். அதுதான் உன் முகம் உம்மென்று இருக்கிறது!

மீரா: யாராவதும் என்ன? சற்று முன்னால் எங்கள் ஆபீஸ் மானேஜர் இந்தப் பக்கம் வந்திருந்தார். நான் தற்செயலாக வெளியே வரவும், பார்த்துவிட்டு உள்ளே வந்து ஐந்து நிமிஷம் இருந்தார். எனக்கு ஒரே அவமானமாகப் போய்விட்டது. நாக்கைப் பிடுங்கிக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. அவர் வீட்டைப் பார்த்துவிட்டுப் போன போது, இதோ பாருங்கள், என்னதான் நினைத்துக்

# புதிய பார்லே மாரி பிஸ்கெட்டுடன்

## காப்பியின் சுவையை அனுபவிப்பீர்




க்ளுகோ, மொனகோ
மற்றும் சுவைமிக்க இதர
பிஸ்கெட்டுகளின்
தயாரிப்பாளர்களான பார்லே
உங்களுக்கென பிரத்யேகமாக
வழங்குகின்றனர்—
காப்பியின் சுவைக்குச் சுவையூட்டும்—

**பார்லே**
**மாரி**
**பிஸ்கெட்டுகள்**

**அருமையான ருசியுள்ளவை—ஃபாயில்-ஸீல்டு பேக்குகளில்**

everest/1080a/PP tam



மேல் நாடுகளில் மூன்று வேளையும் ரொட்டி சாப்பிடுவோர்கள் முக்கிய ஆகாரமாக. அதுவும் ஆயிரக் கணக்கில் ரொட்டி தயாரிக்கும் இயந்திரங்களால் பயன் ஏற்படும் அங்கே. இங்கும் அதே அளவு விற்பனை நடக்கும் என்று எதிர்பார்க்கலாமா? இதை யோசிக்காமல் கோடிக் கணக்கில் மூலதனம் போட்டு ஆரம்பிக்கப்பட்ட 'மாடர்ன் பேக்கரீஸ்' என்ற அரசாங்க நிறுவனம் இந்த ஆண்டு ஒன்பது லட்சம் ரூபாய் நஷ்டம் அடைந்துள்ளது.

ஆதாரம் : டைம்ஸ் ஆஃப் இந்தியா-பாரி.

கொண்டிருக்கிறீர்கள் நீங்கள்? இந்தக் குச்சி வேலே குடும்பம் நடத்திச் சமாதி ஆக வேண்டியதுதானு?

குமார் (சிரித்துவிட்டு அருகில் வந்து அமர்ந்து கொண்டு) : மீரா, உன் கோபத்துக்குக் காரணம் புரிகிறது. இதோ பார்....!

மீரா: நான் எங்கேயும் பார்க்க வேண்டாம். போன சனிக்கிழமை எங்கள் ஆபீஸ் டைப்பிஸ்ட் கருணாவும் டெலிபோன் ஆப்பரேடர் நீலாவும் வந்திருந்தார்கள். அவர்கள் என்ன கேட்டார்கள் தெரியுமா ?

குமார் (கேலியாக): அவியல் எப்படிப் பண்ணுகிறது என்று கருணா கேட்டிருப்பாள். நெல்லிக்காய்த் தொக்கு எப்படிச் செய்கிறது என்று நீலா கேட்டிருப்பாள்.

மீரா: நீங்கள் கேலி செய்து பேச்சை மாற்றப் பார்க்கிறீர்கள். நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை !

குமார்: சரிசரி, சொல்லு கேட்கிறேன்.

மீரா: 'என்னடி மீரா, ஒரு நல்ல லோகாலிடியிலே ஒரு டெனண்ட் ஹவுஸ் கிடைக்கவில்லையா உனக்கு?' என்று நீலா கேட்டாள். இதற்கு என்ன சொல்கிறீர்கள்?

குமார்: அவளுக்கு இங்கிலீஷிலே இந்த மூணு வார்த்தைதான் முழுசாத் தெரியும் என்று நினைக்கிறேன்.

மீரா (கோபத்துடன்): சரி, நான் ஒன்றும் சொல்லவில்லை.

குமார் (அவள் கையைப் பிடித்து): கோபத்தைப் பார்! சரி, முழுதும் சொல்! கருணா என்ன சொன்னாள்?

மீரா: 'இரண்டு பேரும் விழுந்து விழுந்து சம்பாதிக்கிறீர்கள். இந்த 3-ரூம் டன்சன்லேயா இருக்கணும் நீ?' என்றாள் கருணா. போதுமா ?

குமார்: போதாமல் என்ன!

மீரா: இத்தனைக்கும் கருணா சாதாரண டைப்பிஸ்ட். நூற்றெண்பது ரூபாய் வாடகை கொடுக்கிறாள்.

குமார்: அவள் நானூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குகிறாள் என்றாயே ? அவள் கணவன் எல். ஐ. சி.யிலே அதிகாரியாச்சே ?

மீரா: நான் அவர்களைவிட அதிகச் சம்பளம் வாங்குகிறேன் இல்லையா ?.... நீலா அப்படிக் கேட்டதும்....

குமார்: நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போல் இருந்ததாக்கும் ? என்ன பண்ணுவது? இத்தனை விரல்கள் தந்த மாதிரி, நாக்கும் இருபது முப்பது இருந்திருந்தால், இந்தமாதிரி சமயங்களில் படக் படக்கென்று பிடுங்கிப் போட்டுவிடலாம் !

மீரா (மிகுந்த கோபத்துடன்): உங்களிடம் பேச்சுக் கொடுத்ததே தப்பு.

(சிணுங்கிக்கொண்டு உள்ளே செல்கிறாள்.)

குமார் (அவளைத் தாவிப் பிடித்து): இதோ பார் மீரா! உனக்கு ஓர் அருமையான வீடு வேண்டும். ஹால், சமையலறை, படுக்கை யறை — இப்படி. சரிதானே ?

மீரா: இது நூற்றியோராவது தடவையான பதில்: ஆமாம்! பார்த்திருக்கிறீர்களா? எங்கே ?

குமார்: காம்பவுண்டு உள்ள அழகான சிறிய வீடு.

மீரா: என் பொறுமையைச் சோதிக்கிறீர்கள். எங்கே ? சொல்லுங்கள்.

குமார்: என் தோல் பையை எடு இப்படி.

மீரா: என்ன விளையாடுகிறீர்களா? தோல் பைக்குள் அடங்குகிற வீட்டைப் பார்த்து எடுத்தீர்களாக்கும் ?

குமார்: எடேன், சொல்றேன்.

மீரா: இந்தாருங்கள், நீங்களே திறந்து கொள்ளுங்கள்.

குமார் ('ஜிப்'பைத் திறந்து ஒரு ரசீதை எடுக்கிறான்): இதோ பார் !

மீரா: என்ன ரசீது இது? எவ்வளவுக்கு ? (திகைத்துப் போய்) இருபத்தையாயிரம் ரூபாயா ! யார் கொடுத்தார்கள் ?

குமார்: யார் கொடுப்பார்கள்? நான் தான் கொடுத்திருக்கிறேன் — புது வீட்டுக்கு அட்வான்ஸ். இன்னும் நாலு மாதங்களில் மெஸர்ஸ் ரங்கா அண்டு கம்பெனி நமக்கு ஒரு புது வீடு கட்டி நம்மிடம் ஒப்படைப்பார்கள். இதோ பார் பிளானை.... இடம் எங்கே தெரியுமோ ?

மீரா (இன்னும் திகைப்பு அடங்காமல்) : எங்கே ?

குமார்: பாஷ் லோகாலிடி. அடையாற்றில் அரவிந்த் அவென்யூ.

மீரா: அடையாறு ! அட, அங்கேதான் எங்க ஆபீசும் மாறப் போகிறது! ஆமாம், உங்களுக்கு ஏது இவ்வளவு பணம்? தங்கை கல்யாணக் கடன் கட்ட வேண்டும் என்று சொன்னீர்கள் !

குமார் (சிரித்து): உனக்கு ஏதாவது சமாதானம் சொல்ல வேண்டாமா? அதற்குத்

தான் அப்படி சொன்னேன். இது முழுக்க முழுக்க உன் பணம். அப்படியே பாங்கில் போட்டு வைத்திருந்தேன். இன்னும் பாக்கி பத்தாயிரம் கடைசியில்தான் கொடுக்க வேண்டும். அதற்கும் என்னிடம் இருக்கிறது. இருநூறு முந்நூறு வாடகை கொடுத்திருந்தால் இதைக் கொடுக்க முடிந்திருக்குமா ?

மீரா (மகிழ்ச்சி பொங்க, அதை அடக்க மாட்டாமல்): நான் உங்களை ரொம்பவும் கோபித்துக் கொண்டு விட்டேன்!

குமார்: சேச்சே! இப்போது சொல், யாரையெல்லாம் கிரகப் பிரவேசத்துக்குக் கூப்பிட வேண்டும் என்று. ஒரு லிஸ்ட் போடலாம்.

மீரா: எங்கள் மானேஜர் பிரபாகர் முதல் பியூன் சாமிநாதபா வரை! அப்படியே பங்கஜம் அத்தைக்கும் ஒரு கடிதம் போடுங்கள்,—ஸ்பெஷலாக.

குமார்: அத்தை இனி தாராளமாகக் கொடி கட்டி சரத் துணி பறக்கவிடலாம் என்று எழுதட்டுமா ?

(இருவரும் சிரிக்கிறார்கள்)

## 4

(ஆறு மாதங்களுக்குப் பிறகு மாலை வேளை. அடையாற்றில் அரவிந்த் அவென்யூவில் புதிய வீடு.)

மீரா: நல்ல இடமாகப் பிடித்தீர்கள் போங்கள். லாண்டிரி என்கிற நாமதேயமே இல்லை. தபால் ஆபீஸ் இரண்டு மைல். மளிகைக் கடை காத தூரத்தில் இருக்கிறது.

குமார்: இன்னும் பத்து வருஷங்கள் கழித்து இந்த இடத்தில் நீ நிலம் கேட்டால்கூடக் கிடைக்காது தெரியுமா ?

மீரா: பத்து வருஷங்கள் நாம் இங்கேயே வாசலைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கப் போகிறோமாக்கும் ? விடுங்கள். இப்போது கறிகாய்க் கடைக்கு யார் போகிறது? நீங்கள் போகிறீர்களா ? நான் கிளம்பட்டுமா ?

குமார்: வாரத்தில் பாதி நாள் இந்தப் பிரச்னைதான் போ! சரி, நானே கிளம்புகிறேன். பை எங்கே ?

மீரா: அப்படியே ஒரு கிலோ சர்க்கரையும் வாங்கிக் கொண்டு வந்து விடுங்கள். நேற்றே சர்க்கரை காலி.

குமார்: இன்னொரு பர்லாங் கூட நடக்க வேணுமா ?

மீரா: ஏன், மயிலாப்பூர் வீடே தேவலாம் போல் இருக்கிறதா? வாசற்படியிலேயே மளிகைக் கடை. கொல்லைப்புறத்தில் கறிகாய்க் கடை.

குமார்: அப்போ இதை என்ன செய்கிறதாம் ?

மீரா: வாடகைக்கு விடுகிறது. 'இன்டிபெண்டன்ட் பங்களோ இன் அரிஸ்டோக்ராட்டிக் லொகாலிடி' என்று நாளைக்கே ஒரு விளம்பரம் கொடுத்துவிட்டால் போகிறது!

(இருவரும் சிரிக்கிறார்கள்.)



## வழிகாட்டிகள் இரண்டு விதம்!

ஹாறுப் முகமத் இஸ்மாயில் அவர்களைக் குவாயத் என்று சிறப்புப் பெயரிட்டு அழைக்கிறார்கள். அரபு மொழியில் குவாயத் என்றாலும் வழிகாட்டிதான் ஸாயத் என்றாலும் வழிகாட்டிதான். ஆனால் பின்னதை விட்டு முன்னதைத் தேர்ந்தெடுப்பானேன்?

ஒட்டகத்தின் மீது அமர்ந்து லகானைப் பிடித்து வழிகாட்டிச் செல்பவன் ஸாயத். ஆனால் குவாயத லகானைப் பிடித்தபடி ஒட்டகத்தின் முன்னால் தான் நடந்து சென்று வழி காட்டுவான்.

ஹாறுப் இஸ்மாயில் இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவர். வழியில் இடையூறுகள் ஆபத்துக்கள் ஏதும் ஏற்பட்டால் அவற்றை முதலில் தாம் ஏற்றுப் பின்னால் வருவோரை எச்சரிக்கும் உயர்ந்த பண்பு கொண்டவர். அதனால்தான் அவர் குவாயத் ஆகிறார்.

-அப்துல் ஸமத்

## லட்சங்களை அலட்சியம் செய்தவர்!

பாகிஸ்தான் பிரிவினையின்போது முஸ்லிம் லீக் கட்சியினிடம் பதின்மூன்று லட்ச ரூபாய் பணம் இருந்தது. நாடும் கட்சியும் இரண்டாகப் பிளந்ததை யொட்டி இந்தப் பணத்தையும் பங்கீடு செய்து கொள்ளலாம் என்று யோசனை தெரிவிக்கப் பட்டது. ஆனால் முகம்மது இஸ்மாயில் அவர்கள் 'அந்தப் பணத்தில் நமக்குச் சல்லிக் காசு வேண்டாம்; முழுக்க முழுக்க பாகிஸ்தான் முஸ்லிம் லீக்குக்கே போய்ச் சேரட்டும்' என்று கூறிவிட்டார். 'பணம் இருக்கிறது என்பதால் சுதந்திரத்துக்குப் பின்னும் பாரதத்தில் முஸ்லிம் லீக் தொடர்ந்து இயங்குகிறது' என்ற எண்ணம் யாருக்கும் ஏற்பட்டு விட வேண்டாம் என்பதே அவரது இந்த முடிவுக்குக் காரணம்.

-ரஹ்மா கான்

## அதிசயம்!

திரு வேங்கடசாமி கனவானாக அரசியலில் நுழைந்தார். நீண்ட நாள் பணியாற்றிவிட்டு அரசியலை விட்டு வெளிப் போந்தபோதும் கனவானாகவே இருந்தார்!

-சித்ரா எஸ். நாராயணசுவாமி

(திரு வேங்கடசாமி நாயுடு, ஹாறுப் மகமத் இஸ்மாயில் ஆகியோர் மறைவு குறித்துச் சென்னை நகர ஷெரீப் திரு எம். ஏ. எம். ராமசாமி கூட்டிய இரங்கல் கூட்டத்தில் சேகரிக்கப்பட்டவை)



# தேநீர்க் கடையின் வருவாயில் சட்டக் கல்லூரி செல்கிறார்!

'ஆந்திரப் பத்திரிகா' என்னும் பிரபல தினசரியில் உதவி ஆசிரியராக இருக்கும் திரு ராதாகிருஷ்ணன் என் நண்பர்.

ஒரு நாள், ''வாருங்கள், காப்பி சாப்பிடலாம்'' என என்னை அழைத்தார். சரி என ஒப்புக் கொண்டேன்.

''ஹோட்டலுக்கு இல்லை! இங்கே ஒரு டீக் கடைக்குப் போவோம்! சட்டக் கல்லூரியில் படிக்கும் ஒரு மாணவர் டீக் கடை வைத்திருக்கிறார்! காப்பிகூட நன்றாக இருக்கிறது! கொஞ்ச நாட்களாக அங்கேதான் நான் காப்பி சாப்பிடுகிறேன்!'' என்றார்.



டீ கலந்து...

எனக்கு வியப்பாயிருந்தது. வடபழனி காவல் நிலையத்தை ஒட்டிச் செல்லும் தேசிகர் தெருவில் சிறு கடைகளுக்கு மத்தியில் அந்தத் தேநீர்க் கடை இருந்தது. கடை வாசலில் பல கல்லூரி மாணவர்கள் கையில் டீ கிளாசுடன் நின்று அளவளாவிக் கொண்டிருந்தனர்.

கும்பகோணத்தைச் சேர்ந்த வாலிபர் அமிர்தலிங்கத்திடம் அவர் அன்புடன் தயாரித்துக் கொடுத்த காப்பியை ருசித்துக் கொண்டே சில கேள்விகளைக் கேட்டேன்.

அவரும், கடைக்குள் வருவோருக்கு டீயும், பிஸ்கெட்டும் கொடுத்தபடியே பதில் தந்தார்.

கேள்வி: பள்ளிக்கூட நாட்களிலும் கல்வி கற்றுக் கொண்டே பணம் சம்பாதித்தீர்களா? என்னென்ன வேலை செய்தீர்கள்?

பதில்: என் குடும்பம் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தது. என் தந்தை கும்பகோணம் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்டில் வேலை பார்த்து வருகிறார்.

எஸ். எஸ். எல். சி. படித்து, பரீட்சை எழுதி முடித்த அன்று மாலையே டாக்டர் வி. ஆர். மூர்த்தியைப் பார்த்து வேலை கேட்டேன். (கும்பகோணம் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்டை நிறுவியவர். தற்போது இவர் ஜீவியவந்தராக இல்லை.)

'இன்றைக்குத்தான் எஸ். எஸ். எல். சி. பரீட்சை எழுதி முடிச்சிருக்கே. உடனே வேலை வேணுமா?' எனச் சிரித்துக்கொண்டே கேட்டார்.

'ஆமாம், டாக்டர்! இன்று முதல் வேலை செய்து சம்பாதித்துக் கொண்டே நான் மேல் படிப்புக்களை முடிக்கத் திட்டமிட்டிருக்கிறேன். முதன் முதல் உங்களிடம்தான் வந்து நிற்கிறேன், வேலை கேட்டு!' எனப் பணிச்சென்று சொன்னேன்.

'வெரிகுட்! இன்வாய்ஸ் கிளார்க் வேலை தருகிறேன். மாசம் நாற்பத்தஞ்சு ரூபாய்



கொடுக்கிறார்...

சம்பளம்! இன்றைக்கே வேலை தொடங்கலாம்!' என உற்சாகமாகச் சொல்லிவிட்டார்.

பி. யூ. சி.யில் சேர்ந்து படித்தேன், கும்பகோணம் கல்லூரியில்.

கேள்வி: முதல் வேலையை எத்தனை மாதங்கள் செய்து வந்தீர்கள்?

பதில்: மூன்று மாதங்கள் செய்தேன். பி. யூ. சி. தேர்வுக்குப் பிறகு அந்த ஊர் கடலங்குடித் தெருவிலிருக்கும் டி. வி. எஸ். பார்சல் புக்கிங் ஆபீஸில், வேலை கிடைத்தது. ஒரு மாத விடுமுறையில் சென்றிருந்த ஒரு குமாஸ்தாவுக்குப் பதிலாக நான், ஒரு



திரு அமிர்தலிங்கம்

> சாப்பிடுவது மனித காரியம்
> ஜீரணிப்பது கடவுள் கிருபை!
>
> —மார்க் ட்வைன்
>
> தகவல்: கன்னிகா

மாதம் அங்கு 'இன்வாய்ஸ்' கிளார்க் வேலை பார்த்தேன்.

கேள்வி: வேறு எங்கு வேலை பார்த்தீர்கள்?

பதில்: பி. ஏ. படிக்கத் தொடங்கியதும், ஒரு பிஸ்கட் ஏஜண்டிடம் போனேன். திரு ஏ. வி. ராவ் நல்ல மனிதர். ஜே. பி. மங்காராம் பிஸ்கட் நிறுவனத்தின் கும்பகோணம் ஏஜன்டாக இருந்தார். அவரிடம் மாதம் முப்பது ரூபாய் சம்பளமும், தினம் இருபத்தைந்து பைசா காப்பிச் செலவுக்கும் கிடைத்தன.

கேள்வி: பிஸ்கட் ஏஜண்டிடம் என்ன வேலை செய்தீர்கள்?

பதில்: ரயிலில் வரும் பார்சல்களை டெலிவரி எடுத்து, பாக்கிங்கைப் பிரித்து டின்களில் வரும் பிஸ்கட்டுகளைச் சைக்கிளில் கட்டிச் செல்வேன். கும்பகோணத்தில் உள்ள பல கடைகளுக்கும் சென்று தேவையான பிஸ்கட் பாக்கெட்டுகளைத் தருவது: பில் பணம் வசூலிப்பது: இப்படியான வேலைகள்...

கேள்வி: கல்லூரி நேரம் போக, காலை மாலைப் பொழுதுகளிலா?

பதில்: விடுமுறை நாட்களில் பகல் முழுவதும் வேலை செய்வேன். மற்ற நாட்களில் மாலை நேரங்களில் — இரவு ஒன்பது மணி வரை செய்வேன்.

மூன்றாண்டுகள் இப்படியே என் பொருளாதாரத்தைச் சமாளித்துக் கொண்டு கல்லூரியில் 'பொருளாதாரம்' கற்றுப் பட்டம் பெற்றேன்.

கேள்வி: பிறகு கும்பகோணத்திலிருந்து சென்னைக்கு வந்து, சட்டக் கல்லூரியில் சேர்ந்தீர்களா?

பதில்: ஆமாம். ஆனால் பி. ஏ. படித்து விட்டு, மூன்றாண்டுகள் வரையில் வேலை பார்த்த பிறகே சென்னை வந்தேன். கும்பகோணத்தில் திரு கிருஷ்ணா பிஸ்கட் தொழிற்சாலையில் மூன்றாண்டுகள் இருந்தேன். படிப்பில் என் லட்சியம் இன்னும் நிறைவேறாமல் இருந்ததாலும், திருமணமும் ஆகிவிட்டதாலும் நான் பல பிரச்னைகளைச் சந்தித்தேன்.

கேள்வி: படிப்பில் என்ன லட்சியத்தை மேற்கொண்டிருந்தீர்கள்?

பதில்: சுயமுயற்சியால், என் வருமானத்தைக் கொண்டே பி. ஏ. பி.எல். படித்து முடிக்க வேண்டும் என்பதுதான் என் லட்சியம்! அதற்குக் கும்பகோணம் கிருஷ்ணா பிஸ்கட் தொழிற்சாலையின் அதிபர் உதவினார். அந்தப் பிஸ்கட் நிறுவனத்தின் தயாரிப்புகளைச் சென்னையில் விற்க வந்தேன்.

கேள்வி: அந்த விற்பனை என்ன ஆயிற்று?

பதில்: கிருஷ்ணா பிஸ்கட் உரிமையாளர் என் மீது அன்பு கொண்டு, உதவி செய்யும் நோக்கத்துடன் இரண்டாயிரம் ரூபாய்க்குப் பிஸ்கட் சரக்குகள் அனுப்பித் தந்தார். சென்னை வாசம் எனக்குப் புதிய அநுபவம். சில்லறைக் கடைகளுக்கு சப்ளை செய்தேன். ரூ. 1800 வரை கடன் பாக்கி வரவில்லை. சால்ஜாப்பு கூறி ஏமாற்றி விட்டனர். இரண்டாயிரம் ரூபாய் சரக்குகள் அனுப்பியவருக்கு இருநூறுதான் அனுப்பினேன். அதனால் பிஸ்கட் விற்பனை தடைப்பட்டது.

இதற்கிடையில் சட்டக் கல்லூரியில் சேர்ந்து விட்டேன். படிப்பை நிறுத்தாமல் இருக்க, கடந்த இரண்டு வருஷங்களாக, பலப்பல வேலைகளைச் செய்தேன்.

கேள்வி: விரிவாகச் சொல்வீர்களா?

பதில்: காலையில் பத்து மணிக்குச் சட்டக் கல்லூரி சென்று பிற்பகல் இரண்டு மணிக்கு வீடு திரும்புவேன். மாலையில் பல டியூஷன்கள்; இரவில் வீட்டில் பினாயில் கூட தயாரித்துப் பந்தர் தெருவில் ஒரு கடையில் கொண்டு விற்பேன். சினிமாப் படம் எடுக்கும் போது 'எக்ஸ்டிரா' வேடம் கிடைத்தால், அதை ஏற்று நடிப்பேன். அதில் நாளொன்றுக்கு ஆறு ரூபாய் வரும்படி கிடைக்கும். வெய்யிலில் மணிக்கணக்காய் நிற்க நான் தயங்குவதில்லை!

கேள்வி: டீக் கடைக்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்?

பதில்: பிள்ளைகளுக்கு டியூஷன் சொல்லித் தருவதில் மாதம் நூற்றியிருபது ரூபாய் கிடைத்தது. குடும்பம் நடத்தப் போதவில்லை. தினமும் பஸ்ஸுக்குப் பணம் தர முடியாமல் கோடம்பாக்கம் ரயில்வே ஸ்டேஷனுக்கு நடந்து சென்று மின்சார ரயிலில் கோட்டை போய்த் திரும்புவேன். மாணவர் சலுகையாய் சீசன் டிக்கட் இரண்டு ரூபாய்தான். வறுமையிலும் ஓரளவு செம்மையாக நாட்கள் ஓடின. எனக்குக் குழந்தைகள் இரண்டு பேர். குடும்பக் கஷ்டம் அதிகமாகியது.

இரண்டாயிரம் ரூபாய் செலவு செய்து டீக் கடை வைத்து நடத்தி வந்த ஒருவர், இதைத் தொடர்ந்து நடத்த முடியாமல் இருந்தார்.

என் கையில் இருந்த இருபத்தைந்து ரூபாய் மூலதனத்தைக் கொண்டு கடைக்கு அன்றாடத் தேவைக்கான சாமான்களை வாங்கிப் போட்டேன். வாடகை இரண்டரை ரூபாய் பேசிக் கடையை நடத்த முன்வந்தேன். எட்டு மாதங்களாக இதை நடத்தி வருகிறேன். சிறுகச் சிறுக டீக் கடைக்கு வேண்டிய அநுபவத்தைப் பெற்று விட்டேன்.

இட்லி, புட்டு, காப்பி, டீ எல்லாம் கடையில் நானே செய்கிறேன். வியாபாரம் நடப்பதால்தான் என் குடும்பம் நடக்கிறது. படிப்பும் தொடர்ந்து கொண்டிருக்கிறது! டியூஷன்களையும் விடவில்லை. டீக் கடையை மாலையில் கவனித்துக் கொள்ள ஒரு பையனை நியமித்திருக்கிறேன்.

* * *

கஷ்டப்படுவதற்குச் சிறிதும் அஞ்சாமல், வறட்டுக் கௌரவம் பாராமல் உழைக்கும் திரு அமிர்தலிங்கம், இன்னும் ஓராண்டில் பி. எல். பட்டமும் பெற்றுவிடுவார்!

இதில் ஒரு ரகசியம். அமிர்தலிங்கத்தின் சக மாணவர்களுக்கு இவர் டீக் கடை வைத்திருப்பது தெரியும்! ஆனால் சட்டக் கல்லூரிப் பேராசிரியர்களுக்கு இன்றுவரையில் இது தெரியாது!

பேட்டி: ஏ. சுவாமிநாதன்



# அம்மா ஒரு பிரச்னை

பீஷ்மன்

''வெளியே எத்தனை பேர் இன்னும் இருக்காங்க?'' என்று கேட்டார் டாக்டர் — கைக் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டே.

''எட்டுப் பேர் ஸார்!'' என்றான் அருணாசலம், அறை வாசலில் தொங்கிய திரையை ஒதுக்கிக் கொண்டு ஹாலை நோட்டமிட்டபடியே.

மணி ஒன்பதை நெருங்கிக் கொண்டிருந்தது.

''இன்னும் எட்டுப் பேர் இருக்கிறார்களா?''

''தண்ணி குடிச்சாக்கூட உடனே வாந்தி எடுக்குது சார்...! வயிற்றைக் கருட்டிக் கருட்டி வலிக்குது. நேத்துக் காலையிலே சாப்பிட்டப்புறம் ஒரு சொட்டுத் தண்ணிகூடத் தங்கலே வயித்திலே...''

வந்திருக்கும் நோயாளியைக் கட்டிலில் படுக்க வைத்து வயிற்றை அமுக்கிப் பார்த்தார் டாக்டர். வாயைத் திறந்து நாக்கை நீட்டச் சொன்னார்.

அடிவயிற்றை டாக்டர் அமுக்கியபோது, ''ஆங்... அங்கேதான் ஸார்... ரொம்ப வலிக்குது!'' என்று அலறினான் அவன்.

''வயிறு ரொம்பப் புண்பட்டுப் போயிருக்கப்பா!''

'அம்மா இப்போ எப்படி இருக்காளோ?'

''இப்படி அடிக்கடி ஏற்படுதா?'' கையை வாஷ்பேசினில் கழுவிவிட்டுத் துண்டில் துடைத்துக் கொண்டே கேட்டார்.

''இல்லீங்க. இப்போத்தான் இப்படி...'' என்று சொல்லிக் கொண்டே வேட்டியைச் சரி செய்து கொண்டு இறங்கியவன், டாக்டரின் இருக்கைக்குப் பக்கத்தில் கிடந்த ஸ்டூலில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

'ராம்சிங் வீட்டுக்குப் போய்ப் பார்த்து விட்டுப் போகிறபோது பத்து மணிக்கு மேலாயிடும் போலிருக்கு...! அம்மா கதறிக் கதறி ஊரைக் கூட்டிண்டிருப்பா!'

''இந்த மருந்தை நாலு வேளை சாப்பிடு. நாளைக்கு வந்து சொல்லு.''

''என்ன ஆகாரம் சாப்பிடலாம் ஸார்?''

டாக்டர் சிரித்தார்.

''மோர் சாதம்... ஆரோரூட் கஞ்சி!''

அவன் போய்விட்டான்.

''இருபத்தேழு!'' என்று அடுத்த நம்பருக்கு அறிவிப்புக் கொடுத்துக் கொண்டிருந்தான் அருணாசலம்.

யாரோ ஒரு வயதான அம்மாளைக் கைத்தாங்கலாக அழைத்துக் கொண்டு ஓர் இளைஞன் உள்ளே வந்தான். அந்த அம்மாளுக்கு அறுபது வயதுக்கு மேலிருக்கும்.

'அம்மாவுக்கு இன்னும் அறுபது நிறையக் கூட இல்லே. அதற்குள் அம்மாதான் எப்படித் தளர்ந்து போய் விட்டாள்!'

வந்திருக்கும் நோயாளியைப் பரிசோதிப்பதில் கண்ணும் மனமும் ஈடுபட்டிருந்தாலும் நெஞ்சுக்குள் தனியாக ஒரு நினைவு இழை ஓடுவதைத் தவிர்க்க முடியவில்லை.

வீட்டில் அவனுக்கென்று ஒதுக்கியிருக்கும் மாடிப் பெரிய அறையின் நடுவில் கட்டிலில் படுத்துக் கொண்டிருக்கும் அம்மாவின் உருவம் — நெஞ்சுக்குள் தனியாக இயங்கும் அந்த நினைவுக் கண்ணுக்குத் தெரிகிறது.

''சுவாமி...! என்னைக் கொண்டு போய்விட மாட்டாயா... தெய்வமே... அம்மா!'' என்று அவள் கதறும் ஒலி அவர் நினைவுக் காதுகளுக்குக் கேட்கிறது.

பாண்ட் பாக்கெட்டுக்குள்ளிருந்து கைக்குட்டையை உருவி எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொள்கிறார்.

''நேற்று ராத்திரி நன்றாத் தூங்கினேன், டாக்டர். உடம்பு வலியெல்லாம் கூடக் கொஞ்சம் பரவாயில்லே...''

''குட்!''

யார் யாருடைய வலியை யெல்லாமோ போக்கிக் கொண்டிருக்கும் அவரால் அம்மாவின் வலியையும் வேதனையையும் போக்க முடியவில்லையே!

''நேரம் ஆகிவிட்டதப்பா! — இப்போ வந்து கதவைத் தட்டினால்...?''

வெளியே அருணாசலம் கேட்டருகே யாருடனே வாக்குவாதம் செய்வது அசரீரி போல ஒலிக்கிறது.

நேரம் ஆகிவிட்ட பிறகு வந்து கதவைத் தட்டுபவனைப் போல்... காலம் கடந்த பிறகு தான் அம்மாவின் நோயை அவர் கண்டிருக்கிறார்! அதன் விளைவு?

கண்ணெதிரே அம்மா புழுப் போலத் துடிப்பதைப் பார்த்துக் கொண்டு கையாலாகாதவராய்...

கழுத்தில் ஸர்ப்பமாய் நெளியும் ஸ்டெதாஸ்கோப்பைக் கழற்றி மேஜையின் மீது போட்டார்.

''முடிஞ்சுதா?''

''ஆயிட்டுது ஸார்!''

வாஷ்பேஸினில் முகத்தைக் கழுவிக் கொண்டார். துண்டினால் துடைத்துக் கொண்டு கண்ணாடியில் தெரிந்த தம் முகத்தைப் பார்த்து ஏதோ அர்த்தமில்லாமல் சிரித்துக் கொண்டார்.

மணி ஒன்பதரை ஆகிவிட்டிருந்தது.

பக்கத்துக் கடையை மூடிக்கொண்டிருப்பது கிர்ர்ர்... ரென்று இரும்புக் கதவை இழுப்பதன் ஒலி மூலம் தெரிந்தது.

கைப் பையை எடுத்துக் கொண்டு கிளம்பினார் டாக்டர்.

''அருணாசலம்!''

''வரேன், சார்!''

'அம்மா தூங்கியிருப்பாளோ...? தூங்கினால்தான் தேவலையே!'

காரில் ஏறி உட்கார்ந்து 'ஸ்டார்ட்' செய்து கொண்டே கேட்டருகே நின்றிருந்த அருணாசலத்தைப் பார்த்து, 'வருகிறேன்' என்று சொல்வதைப் போல ஒரு புன்னகை செய்தார். அவனும் அதைப் புரிந்து கொண்டவனாக ''சரிங்க...'' என்று வாய் விட்டே பதில் சொன்னான்.

அவர் கண்ணுக்கு அங்கே அருணாசலம் தெரியவில்லை. கனிந்த தாய்மையின் கம்பீரத்துடன், கலங்கி நிற்கும் கண்களிலிருந்து ஒரு பொட்டுக் கண்ணீர் கூடக் கீழே விழுந்து விடாமல் கட்டுப்படுத்திக் கொண்டு, பிரிவுத் துயரை மறைக்கும் புன்னகைத் திரை படிந்த முகத்துடன் அவரது அம்மாதான் தெரிந்தாள். அவர் மருத்துவத் துறையில் மேற்படிப்புக்காக லண்டன் செல்லப் புறப்படுகையில் அவர் அம்மா விடை கொடுத்த காட்சி அது. லண்டனில் படித்துக் கொண்டிருந்த காலங்களில் அம்மாவை நினைக்கும் போதெல்லாம் அவள் விடை கொடுத்த இந்தக் கோலம்தான் அவர் கண்ணெதிரில் வந்து நிற்கும். மானசீகமாக அவர் அவளது பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்கையில் கன்னங்கள் ஈரமாகியிருக்கும்.

''உன்னையும் பாகியையும் இங்கே தனியே விட்டுட்டு ராஜு அக்கரைச் சீமைக்குப் போகப் போறானுமே? என்னடி இது லக்ஷ்மி! நீயும் சம்மதம் கொடுத்திட்டியா?'' என்று பக்கத்து வீட்டுப் பாட்டி நீட்டி முழக்கிய போது அம்மாதான் எப்படிப் பதில் சொல்லி அவளை மடக்கி விட்டாள்!

''தனியே என்ன பாட்டி, தனியே? ஊரிலே மனுஷாளே இல்லையா? படிக்க வேண்டிய காலத்திலே படிக்காம இன்னும் பத்து வருஷங்கள் கழிச்சுப் படிக்க முடியுமா? அவன் தன்னை வளர்த்துண்டுட்டா அப்புறம் அந்த நிழல்லே சௌகரியமா இருக்க மாட்டோமா?... பாகிதான் ஆணாகவும் பெண்ணாகவும் எனக்குத் துணையாக இருக்காளே!''

பாகி அவருக்குத் தமக்கை. கல்யாணமான மறு வருடமே வெறும் கழுத்துடன் அவர்கள் வீட்டுக்குத் திரும்பிவிட்ட அபாக்கியவதி அவள். பெற்றவள் அம்மா என்றால் பாகி அவருக்குச் சின்னம்மாதான். அத்தனை பாசம் அவரிடம். தனக்கு என்று ஒரு பிள்ளை இல்லாக் குறையைத் தம்பியிடம் வைக்கும் பாசத்தில் நிறை செய்து கொண்டாள் அவள்.

''பாகி... நான் ரொம்பத் தூரம் போறேனென்று அம்மாவுக்கு வருத்தம்தானே? உங்கிட்ட அம்மா தனியா ஏதாவது வருத்தப்பட்டுண்டாளா பாகி...?'' என்று அவர் பாகியிடம் கேட்டார்.

பாகி சிரித்தாள்.

''அம்மாவை உனக்குப் புரிஞ்சது இவ்வளவுதானா ராஜு? நீ ஊரிலே ரொம்ப ரொம்பப் பெரிய டாக்டராக ஆகிறதைப் பார்க்கணும்கிற ஆசையிலே, அவளுக்கு இதெல்லாம் ஒண்ணுமே இல்லே. வீணா அசட்டுத்தனமா எதையாவது நினைச்சுக் கலங்காதே!''

அவர்கள் அளித்த தெம்பில் அவர் கலக்கமேதும் இல்லாமல்தான் மேல்நாடு சென்றார். அவர் எழுதிய கடிதங்களுக்கெல்லாம் தவறாமல் பாகியிடமிருந்து பதில் வந்து கொண்டிருந்தது. ஒரு கடிதத்திலாவது அம்மாவுக்கு உடம்பு சரியில்லே என்பதைத் தெரிவிக்கவில்லையே பாகி. அம்மாதான் எழுத வேண்டாம் என்று சொன்னால் இவளுக்குப் புத்தி எங்கே போயிற்று?

படித்து முடித்துவிட்ட மகிழ்ச்சிப் பெருக்குடனும், அம்மாவைப் பார்க்கப் போகிற பரவசத்துடனும் அவர் திரும்பியபோது, அவரை வாசலிலேயே எதிர்கொண்டு அழைக்க அம்மா வராமல் பாகி மட்டும் வந்து நின்றதே அவருக்கு அதிர்ச்சியாகத் தான் இருந்தது.

பாகிகூட ரொம்பவும் இளைத்துக் கறுத்துப் போயிருந்தாள்.

''வந்தியாடா... ராஜு...!'' என்று வரவேற்கையிலேயே பாகியின் குரல் தழுதழுத்தது. கண்களும் கலங்கிவிட்டன.

ஒடிந்த நாராய்க் கிடக்கும் அம்மாவின் கண்கள் மட்டும் முகத்தை நிறைத்துக் கொண்டு அவனைப் பார்த்தன.

'' என்னம்மா உனக்கு....?''

அம்மா சிரித்தாள். நோயுற்றுப் பொலிவு குன்றிப் போயிருந்த அவள் முகத்தில் அச்சிரிப்பினூல் நோய்க் களைதான் பெரிதாகத் தெரிந்தது.

''நீ டாக்டர்தானே....? என்னைக் கேட்டால்......?''

''உனக்கு உடம்பு சரியில்லேன்னு எனக்கு எழுதியிருக்கக் கூடாதா.... அம்மா...!''

'' இப்போ என்னடா குடிமுழுகிப் போயிடுத்து.....! எனக்கு ஒன்னுமில்லே..! கொஞ்ச நாட்களா என்னமோ வயித்து வலி! வயசாயிடுத்து இல்லேயா? அதைக்கூடத் தாங்க முடியல்லே......!''

அம்மா வெகு அமைதியாகச் சொல்லிவிட்டாள். அவருக்கென்னமோ, தாம் ஊர் திரும்பிய நேரத்தில் அம்மா இப்படி உடல்நலமில்லாமல் இருப்பது கஷ்டமாக இருந்தது. ஆயினும், தம்முடைய மருத்துவ அறிவில் அவருக்கிருந்த நம்பிக்கையில், அம்மாவைச் சீக்கிரத்தில் குணப்படுத்திவிடலாம் என்று தான் அவர் நினைத்தார்.

ஆனால்....

அம்மாவுக்கிருந்த கோளாறுகளைப் பற்றிக் கேட்டறிந்த பிறகு..... அவள் உடல் நிலையைப் பரிசோதித்த பிறகு.... அவருக்கிருந்த இந்த நம்பிக்கை நைந்து போய்விட்டது.

அம்மாவுக்குப் புற்றுநோய் ! அவரால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. சென்னையில் 'நர்ஸிங் ஹோம்' ஆரம்பிப்பதாக ஏற்கெனவே அவர் தீர்மானித்து வைத்திருந்தார். அம்மாவின் சிகிச்சையை முன்னிட்டுத் தமது நர்ஸிங் ஹோமை இன்னும் சீக்கிரத்தில் திறக்க வேண்டியதாயிற்று.

அம்மாவை, அடையாறு புற்றுநோய் மருத்துவ நிலையத்துக்கு அழைத்துக்கொண்டு போய், பரிசோதிக்கச் செய்தபோது, நோய் மூன்றாவது நிலையைக் கடந்து, சிகித்சைக்குக் கட்டுப்படாத எல்லைக்கு வந்திருப்பது தெரிந்தது.

'ஸெடேடிவ்' ஏதாவது மாற்றி மாற்றிக் கொடுத்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு ஏதும் செய்வதற்கில்லை.

மற்ற டாக்டர்கள் சொல்லித்தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. அவருக்கே அம்மாவின் நிலை தெரிந்துதான் இருந்தது. ஐம்பத்தெட்டு வயதுதான் ஆகியிருந்ததென்றாலும், துயரப்பட்டுப்பட்டே



''என்ன அக்கிரமம்! மந்திரிஜி ஐந்து வருடங்களில் பத்து வீடுகள் வாங்கிட்டாராமே! இதிலிருந்து உங்களுக்கு என்ன தெரிகிறது....?''

''வருடத்திற்கு இரண்டு வீடு வாங்கியிருக்கிறார் என்று தெரிகிறது!''

---

அம்மா தொய்ந்து போயிருந்தாள். தனக்கு உடல் நிலை சரியில்லை என்ற விவரத்தை அறிந்தால் தன் மகனின் படிப்புக்குத் தடங்கல் ஏற்பட்டுவிடுமோ என்ற பயத்திலேயே, பல்லைக் கடித்துக் கொண்டு தன் நோயைப் பொறுத்துக் கொண்டிருந்துவிட்டாள் அம்மா.

''தம்பிக்கு என் உடம்பைப் பற்றி ஏதும் கன்றுபின்னுவென்று எழுதிடாதே பாகி....'' என்று கூறிப் பாகியையும் தடுத்துவிட்டாள்.

அதன் பலன்.....?

அவளால் பொறுக்க முடியாத அளவுக்கு வளர்ந்துவிட்டது நோய்.

சாதாரண வயிற்றுவலியாகத்தான் ஆரம்பித்தது அது. இப்போது.... நெருப்புத் துண்டங்களை வயிற்றில் கட்டிக் கொண்டாற் போன்ற எரிச்சலில் அவள் புழுவாய்த் துடிக்கிறாள்.

மார்பினூல் மாத்திரை.... பெதடீன் இஞ்செக்ஷன்.....

தூக்க மருந்துகள் சில நாட்களிலேயே செயலிழந்து போகின்றன.

ஒன்றை மாற்றி வேறொன்று.... சில நாட்கள்தாம்.....

அப்புறம் அவள் நோய் அந்த மருந்தை வென்று விடுகிறது.

''அம்மா.... யாரோ என் வயித்திலே கொள்ளியை வைச்சுட்டாடா !''

நேற்றிரவு அம்மா பட்ட பாடும், கதறலும்....! சே !

''என்னாலே தாங்கவே முடியலேடா ராஜு! வயிறெல்லாம் பந்தம் கட்டி எரியறதுடா ! அய்யோ.... அம்மா... ஒரேயடியா என்னைத் தூங்கப் பண்ண ஏதாவது மருந்து இருந்தாக் கொடுத்துடுடா ராஜு ! உனக்கு ரொம்பப் புண்ணியமாப் போகும். ராஜு.... ராஜு!''

அடம் பிடிக்கும் பச்சைக் குழந்தை போல, அவர் கையைப் பற்றிக் கொண்டு அம்மா தேம்பித் தேம்பி அழும்போது அவரால் ஏதும் செய்ய இயலாத நிலைமை, அம்மாவின் வேதனையைவிட அவருக்குப் பெரிதாக இருந்தது.

எத்தனையோ நோயாளிகளின் எத்தனையோ விதமான நோய்களுக்கு மருந்து கொடுத்து



''காலேஜிலே படிக்கிறப்ப எனக்கு லவ் லெட்டர் வந்தது. இப்ப நடிக்க ஆரம்பிச்சதும் லவ் தந்தியே வருது!''

வேதனை தீர்க்கும் அவரால், தம் சொந்தத் தாய் படும் வேதனையைத் தீர்க்க முடியாத இந்த அவலத்துக்கு யாரைக் குறை சொல்வது?

அவரைப் படிக்க வைப்பதற்காக அம்மா என்ன பாடுபட்டிருப்பாள் !

அவருக்குப் பத்து வயதில் அப்பா இறந்து போய்விட்டார். வேறு துணை யாருமின்றி, கைப் பொருளும் இன்றி, தன்னந் தனியாய்ச் சாப்பாட்டுக் கடை நடத்தி, பொருள் சேர்த்து, அவரைப் படிக்க வைத்து, விட் டோடு வீடாக வந்து சேர்ந்துவிட்ட பெண்ணையும் காப்பாற்றி....

அம்மா....!

கார் ராம்சிங் வீட்டு வாசலுக்கு வந் திருந்தது.

அந்த வீட்டு வாசலில் வழக்கமாக அவரை வரவேற்கும் டைகரின் உறுமல் கேட்கவில்லை. டைகர் கட்டப்பட்டிருந்த இடம் வெறுமை யாகக் கிடந்தது. ராம்சிங் என்றைக்குப் பக்க வாதத்துடன் படுக்கையில் விழுந்தாரோ, அப்போதிருந்தே அவரது வளர்ப்பு நாய் டைகரையும் அவர் நோயாளியாகத்தான் பார்க்கிறார். எப்போது ராம்சிங்கைப் பார்க் கப் போனாலும் டைகரின் இருமலோ, உறுமலோ தான் அவரை வரவேற்கும்.

வீட்டுக்குப் போனால் அம்மாவின் முனகல்.. ராம்சிங்கின் வீட்டில் டைகரின் உறுமல்.... இப்படி அவருக்குப் பழக்கமாகிவிட்டது.

டைகருக்கு என்ன ஆயிற்று....?

''ஹௌ ஆர் யூ பீலிங் ராம்சிங்...?''

''அம் யூஷுவல் டாக்டர்! ஆனால் இப் பொழுது வீட்டில் வழக்கத்தைவிட மிக அமைதி சூழ்ந்திருக்கிறது....!''

தன் மீசையைத் தடவி விட்டுக் கொண்டு திண்டில் சாய்ந்து கொண்டிருந்தான் ராம்சிங்.

''டைகரைத் தீர்த்துப்புட்டேன் டாக்டர்!'' என்றான் அவன், வெகு அமைதியாக. அவன் காலை அமுக்கிப் பார்த்துக் கொண்டிருந்த டாக்டர் திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தார்.

''...வேதனை பொறுக்க முடியல்லே.... ! என்னவோ நோவு புடிச்சிருந்து அதுக்கு ! அது ஒண்ணும் தீர வழியாயில்லே! அதுக்கும் நிம்மதியில்லாமே நமக்கும் நிம்மதியில்லாமே.. அவஸ்தைப்படறதைவிட, அதுக்கு இப்படி ஒரு நிம்மதியைத் தேடிட்டேன்.''

வெகு அமைதியாக, மீசையைத் தடவி விட்டுக் கொண்டு பேசினான் ராம்சிங்.

என்னவோ பளிச்சென்று நெஞ்சில் வெட்டி யது டாக்டருக்கு.

ராம்சிங்கைப் பார்த்துவிட்டு வந்து காரில் ஏறி உட்கார்ந்து கொண்டார்.

இரண்டு நாட்களுக்குமுன் நடந்த நிகழ்ச்சி அது. நியூரோ ஸர்ஜன் வில்லியம்ஸிடம் பேசிக் கொண்டிருக்கையில் அம்மா படும் அவஸ்தையைப் பற்றி அவரிடம் கூறினார் டாக்டர்.

'' இதற்கு ஒரு வழி இருக்கு டாக்டர்! கொஞ்சம் ரிஸ்க்தான். இருந்தாலும்.....'' என்று ஆரம்பித்த வில்லியம்ஸ், அம்மாவுக்கு மண்டையில் ஒரு நரம்பை ஆபரேட் பண்ணி, இந்த வேதனையை உணராமல் செய்து விடலாமென்றும், ஆனால் இந்தத் தள்ளாத வயதில் அம்மாவால் இந்த ஆபரேஷனைத் தாங்க முடியுமா என்பதுதான் சந்தேகம் என்றும் கூறியிருந்தார்.

ஸ்டியரிங்கைப் பிடித்திருந்த கை பழக்க வேகத்தில் இயங்க, டாக்டரின் மனம் இதைப் பற்றித்தான் இப்போது சிந்தித்துக் கொண் டிருந்தது.

'நாளையே வில்லியம்ஸிடம் சொல்லி ஆபரேஷனுக்கு ஏற்பாடு செய்யச் சொல்ல வேண்டியதுதான். இரண்டில் ஒன்று! பிழைத் தாலும் வேதனை இல்லாமல் இருப்பாள். போய்விட்டாலும்......

'சை! என்ன அரக்கத்தனமான சிந்தனை !

'அம்மாவைப் பற்றியா இப்படி நினைக் கிறேன்!

'அம்மா படும் அவஸ்தையை நினைக்கை யில்..... வில்லியம்ஸ் சொல்வதைச் செய் வதைத் தவிர வேறு வழியில்லைதான்.

'ஆபரேஷன் கத்தியே கொலை வாளாக மாறிவிடுமோ....?

'அப்படி ஏதாவது நேர்ந்துவிட்டால்...?

'நான்தான் அந்தப் பாவத்துக்குக் காரண மாகி நிற்பேன் !

'நீ டாக்டர் ராஜு, நீ டாக்டர் ! – இம் மாதிரிக் கேள்வி கேட்டு உன் மனத்தைக் குழப் பிக் கொள்வது உனக்கு அழகல்ல! மருத்துவ முறையில் எதைச் செய்ய வேண்டுமோ அதைச் செய்ய நீ தயங்கக் கூடாது! முடிவை இறைவன் கையில் ஒப்படைத்துவிடு!'

அவருக்குள் புகுந்திருந்த டாக்டரின் பேச் சில் ராஜு என்ற சாதாரண மனிதரின் சிந்தனை பொடிபட்டுப் போய்விட்டது.

அவர் தீர்மானித்து விட்டார் !

வில்லியம்ஸிடம் நாளைக்குச் சொல்லிவிட வேண்டியதுதான். காரை ஷெட்டில் விட்டு விட்டு, வெளியே வந்தார்.

நிதானமாகப் படிகளில் ஏறி 'காலிங் பெல்'லை அழுத்தினார்.

வாசல் விளக்கு பளிச்சென்று எரிந்தது.

பாலி வந்தாள். கதவைத் திறந்தாள்.

''அம்மா தூங்குகிறாளா....?''

புடவைத் தலைப்பால் வாயை மூடிக் கொண்டு பாலி அழுது கொண்டு நின்றாள் !

டாக்டர் ராஜுவுக்கு வேலை வைக்காமல் மைந்தன் ராஜுவைப் பழியிலிருந்து அம்மா காப்பாற்றி விட்டாள் !

ஆபரேஷனுக்கு அவசியமில்லை !



# நெருங்கி வரும் சமயங்கள்



புத்தர் பிறந்த நாட்டிலே புத்த மதம் தழைக்கவில்லை. ஏசு பிறந்த நாட்டிலே கிறிஸ்து மதம் இல்லை.

அதனால் என்ன? அவரவர் நாட்டைத் தவிர்த்து உலகெல்லாம் பரவியிருக்கிறது. அதற்குக் காரணம் அவர்கள் பெற்ற அரும் சீடர்கள்.

1900 ஆண்டுகளுக்குமுன் ஏசுநாதர் ஏற்றிய ஒளி விளக்கை ஏந்தித் தமிழ் நாட்டில் மயிலாப்பூரிலும், பரங்கிமலையிலும் வாழ்ந்து கிறிஸ்து சமயத்தைப் பரப்பினார் செயிண்ட் தாமஸ். அவரது 19வது நூற்றாண்டு விழா சமீபத்தில் சென்னையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ரோமாபுரியிலிருந்து போப் ஆண்டவரின் பிரதிநிதியும் இதில் கலந்து கொண்டார்.

இந்த முக்கிய பெருவிழா சென்னையின் பல பகுதிகளில் நடந்து கொண்டிருக்கையிலேயே புனித தந்தை இக்னேஷியஸ் இருதயம் அவர்கள் சென்னையிலுள்ள சமணர், பௌத்தர், ஹிந்துக்கள், இஸ்லாமியர், கிறிஸ்துவர் ஆகிய எல்லா மதத்தினரின் கவனத்தையும் கவரக்கூடிய ஓர் அரிய நிகழ்ச்சியை ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் ஏற்பாடு செய்தார். அதுதான் சர்வ சமய மகாநாடு.

ஏப்ரல் 15ந் தேதி சனிக்கிழமை காலை பத்து மணிக்கு, மிக மதிப்புக்குரிய கார்டினல் ஜோஸப் பரேகாட்டில் தலைமையில் இம்மகாநாடு நடைபெற்றது. அவைத் தலைவர் பூரண கும்ப மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். ஸ்ரீமதி சேலம் எஸ். ஜெயலக்ஷ்மி அவர்கள், ''அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்'' என்ற எல்லாச் சமயத்தவரும் ஏற்கக் கூடிய தாயுமானவர் பாடலைப் பாட விழா தொடங்கியது. பேராசிரியர் எஸ். ஆரோக்கியசாமி வரவேற்புரை நல்கினார். பின்னர் டாக்டர் ரவீந்திர குமார் ஜெயின் அஹிம்சையை வற்புறுத்தும் சமண மதத்தைப் பற்றிக் கூறினார். எவன் தன் குற்றங்களை வெல்கிறானோ அவனே ஜைனன். சமண மதத்தை நிறுவிய மகாவீரரின் இருபத்தைந்தாவது நூற்றாண்டு விழா இன்னும் இரண்டு ஆண்டுகளில் வருகிறது என்பதை நினைவுகூர்ந்தார்.

அடுத்துப் பேசிய மௌலானா அப்துல் வஹாப் சாகேப் புகாரி எம். ஏ., எல். டி. இஸ்லாம் மதத்தினருக்கும் கிறிஸ்துவ சமயத்தினருக்கும் நெருங்கிய நட்பும் நேசமும், பண்டைய நெடுநாளிலிருந்து வந்திருக்கிறது: குரானில் ஓர் அத்தியாயம் முழுதும் மேரி அன்னையைப் பற்றிக் கூறுகிறது என்றார்.

இலங்கை மகாபோதி சங்கத்தின் தென் இந்தியக் கிளை டைரக்டரான புனித எல்லாவல நந்தீசுவர தேரோ, டில்லி ஆர்ச் பிஷப் மிகப் புனித அஞ்சிலியோ பெர்னாண்டஸ், சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தின் தலைவர் சுவாமி தபஸ்யானந்த மகராஜ், சென்னை விசிஷ்டாத்வைத பிரசாரிணி சபைத் தலைவர் டி. ராமஸ்வாமி அய்யங்கார், சிவகுமார் ஆகியோர் புத்தம், கிறிஸ்தவம், வேதாந்தம், வைணவம், சைவம் ஆகிய சம

மேலே: தலைவர் மிகப் புனித ஜோஸப் பரேகாட்டில் அவர்கள் பூரண கும்பத்துடன் வரவேற்கப்படுகிறார். இடையில்: சமண மதத்தைப் பற்றி டாக்டர் ரவீந்திர குமார் ஜெயின் பேசுகிறார். கீழே: மண்டபத்தில் கூடியிருந்த கூட்டத்தின் ஒரு பகுதி. துறவு விரதம் பூண்ட கிறிஸ்துவ சமய கன்னியரும் அன்னையரும்.





''என்னடி இது, காரிலும் ஸ்கூட்டரிலும் உள்ளது போல் உன் கழுத்திலும் 'ரியர் வியூ மிரர்' எதற்கு?''

'' 'ரேட் லைட் ரோமியோ'க்கள் அதிகரித்து விட்டார்கள். எனக்குப் பின்னால் வருகிறவர்களைக் கண்காணிக்கத்தான் இது!''

---

யங்கள் பற்றி அரிய உரைகள் முறையே நிகழ்த்தினர்.

சென்ற 1966 லிருந்து புனித திரு இக்னேஷியஸ் இருதயம் சாமியார் முயற்சியின் பயனாகச் சென்னை சாந்தோமில் ஒரு சர்வ சமய ''ஐக்கிய ஆலயம்'' நிறுவப்பட்டு, அங்கு அவ்வப்போது பல சமயத்தினரும், ''இம்மை, மறுமை'', ''பாவம்'', ''ஆணவம்'' முதலிய பல விஷயங்களைக் குறித்துத் தங்கள் தங்கள் சமயத்தில் எவ்வாறு விளக்கப்படுகிறது என்று எடுத்துரைத்துக் கருத்துப் பரிமாற்றங்கள் செய்து வந்துள்ளனர். அக் கருத்துக்களின் சாராம்சத்தை திரு சி. என். சிங்காரவேலு வெளியிட்டு, இக் கூட்டங்களினால் தாம் பெரிதும் பயனடைந்ததாகக் கூறினார். நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள், அறிவற்ற மக்கள் பல்வேறு சமய வேறுபாடுகளை உண்டாக்கிக் கொண்டு அல்லல் உறுகிறார்களே என்றார். கடவுள் எல்லாச் சமயத்தாருக்கும் ஒருவனே என்ற கருத்தைத் திருமூலர் பாடல் ஒன்றினை மேற்கோள் காட்டி விளக்கினார்.

மகாநாட்டில் நிகழ்த்தப்பட்ட சமய உரைகளைத் தொகுத்து அளிக்க முன்வந்த புனித இக்னேஷியஸ் இருதயம் ஓர் உண்மையை அழகாக எடுத்துச் சொன்னார்.

உண்மைக்கு வளரும் படரும் வாழும் சக்தியுண்டு.

நாம் கண்ட உண்மையே முடிவான உண்மை. நம் முன்னோர் கண்ட உண்மையே உண்மை. மற்றவையெல்லாம் பொய் என்று அழிக்க முயலக் கூடாது.

மற்றவன் ஓர் உண்மையைக் கண்டான் என்றால் அதனைப் புரிந்துகொள்ள முயல வேண்டும்.

ஒவ்வொரு சமயத்திலும் உண்மை இருப்பதனாலன்றோ இத்தனை ஆயிரம் ஆண்டுகள் உலகில் அவை வாழ்ந்து வந்திருக்கின்றன. அச்சமயங்கள் என்ன கூறுகின்றன; அச்சமய குரவர்கள் யாவர் என்று அறிய முயல வேண்டும் என்று பேசினார்.

தலைமை வகித்த புனித கார்டினல் பரேகாட்டில், தாம் கேரளத்தில், பிற சமய மகாநாடு ஒன்றில் பங்கெடுத்துக் கொண்டபோது தமது சமயத்தைச் சேர்ந்த கிறிஸ்துவப் பாதிரிமார்களும், மற்றையோரும் பெருத்த கண்டனங்கள் எழுப்பியதை நினைவுகூர்ந்தார். ''ஆனால் இன்று இங்கு பெருவாரியாகக் கிறிஸ்து சமயத்தைச் சேர்ந்த பாதிரிமார்கள், அன்னையர் முதலியோர் பிற சமய சொற்பொழிவுகளைக் கேட்க வந்திருப்பதைக் காண நான் பெரிதும் மகிழ்கிறேன்'' என்றார்.

இக்காலத்தில் கிறிஸ்துவ சமயப் பிரசாரகர்கள், ஹிந்து சமயத் தத்துவங்களையும், கடவுளர்களையும், சமய வாழ்க்கை நெறிமுறைகளையும் புரிந்துகொள்ள மிக ஆர்வம் கொண்டவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் புரிந்து கொள்ளும் வகையில் நமது கருத்துக்களை எடுத்து இயம்ப வேண்டியது நமது சமயப் பிரசங்கிகளின் கடமையாகும். ஆகவே இதுபோன்ற கூட்டங்களில் சமயங்களைப் பற்றிப் பேசுபவர்கள் தத்தமது சமயத்தைச் சேர்ந்தவர்களையே மனத்தில் கொண்டு பேசுவது கூடாது.

கிறிஸ்துவ சமயத்தில் இப்படியொரு புதிய விழிப்பு எழக் காரணம் என்ன என்று கேட்கலாம். அதற்கு ரோம் நகரத்தில் போப் ஆண்டவர் பெயரில் வெளியாகும் அறிக்கையிலிருந்து ஒரு சில வரிகளைப் பாருங்கள் :

''இன்றைய உலகின் ஒரு முக்கியமான அம்சம், மனிதன் நாளுக்கு நாள் அடுத்தவனை நம்பி வாழ வேண்டிய நிலை. இந்நிலையைத் தோற்றுவித்திருப்பது தொழில் முன்னேற்றம். தொழில், வர்த்தகம் மூலம் இருவரிடை ஏற்படும் நேசமும் சகோதர உறவும் மனத்துக்குப் போதிய நிறைவை அளிப்பதில்லை. உள்ளார்ந்த ஆத்ம ஸ்பரிசம் பரஸ்பரம் இரு உள்ளங்களில் ஏற்பட்டால்தான் அந்த மன நிறைவைக் காண முடியும். இதற்கு மனிதனின் பூரண ஆத்ம வளர்ச்சியைப் பரஸ்பரம் மதிக்கும் மனோபாவம் ஏற்பட வேண்டும்!''

இந்த மனோபாவத்தை வளர்க்கவே, இத்தகைய சர்வ சமய மகாநாடுகள். புனித போப்பாண்டவர் கூறியது எல்லாச் சமயத்தைச் சேர்ந்தவர்களுக்குமே பொருந்தும் அல்லவா?

இந்த மகாநாடு காலை பத்து மணிக்குத் தொடங்கி பகல் ஒரு மணி வரை நடைபெற்றது. இவ்வளவு நீண்ட சமயப் பிரசங்க மகாநாட்டைப் 'போர'டிக்காமல் கலைபடச் செய்தவர்கள் சென்னை அகில இந்திய ரேடியோ வாத்திய கோஷ்டியாரும், எஸ். ராஜம், ஞானஸ்கந்தன், தனபாண்டியன், மல்லிகா போன்ற பாடகர்களும்தான். இவர்கள் ஒரு பிரசங்கத்துக்கும் அடுத்த பிரசங்கத்துக்கும் இடையே, முதலில் பேசப்பட்ட சமயத்தை யொட்டிப் பழம் பாடல்களை இனிமையாக வாத்திய கோஷ்டியுடன் பாடி மெய்சிலிர்க்க வைத்தனர்.

சுதந்திர பாரதத்தில் எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்து வருகின்றன. அவற்றையெல்லாம் நாம் முழு மனத்துடன் வரவேற்கிறோம் என்று சொல்வதற்கில்லை. ஆனால் பலரையும் இணைக்க, சமயத் துறையில் ஏற்பட்டுவரும் இம்மாறுதலை யார்தான் வரவேற்கமாட்டார்கள்? **—எஸ். வி. எஸ்.**

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**

**Managing Editor: T. Sadasivam**

# ANNOUNCING!

The sale of

**BLENDED AND FANCY FABRICS**

made by mixing cotton and

**GRASIM** STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

Registered No. M. 4392

Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)



